V.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS—*cont.*

MR. CHAIRMAN : We will now continue the discussion on the Governor's Address. Sri K. S. Abdul Wahab will now speak. He will please make a short speech as there are still a large number of speakers and as we have to rise at 6 o'clock.

S.i K. S. ABDUL WAHAB : மதிப்புமிக்க மன்றத் தலைவர் அவர்களே அன்பு மிக்க அங்கத்தினர்அவர்களே . . .

MR. CHAIRMAN : The hon. Member should always address the Chair.

* SRI K. S. ABDUL WAHAB : **Excuse me, Sir.**

தலைவர் அவர்களே, நேற்றுப்பேசிய ஸ்ரீமதி திரிப்புரசுந்தரி அம்மையார் அவர்கள் தங்கள் பேச்சைத் துவக்கும்போது தனக்கு இந்தப் பதவியை அளித்த கவர்னர் பெருமானருக்கு நன்றி தொிவித்துக்கொண்டு பேச்சைத் துவக்கினார்கள். அடுத்து எனது அன்புக்குரிய நண்பர் திரு. எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களும் பேச்சைத் துவக்கும்போது தன்னைத் தேர்ந்தெடுத்த திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு நன்றி தெரிவித்துக் கொண்டு பேச்சைத் துவக்கினார்கள். அதைக்கேட்ட நான் என் பேச்சைத் துவக்கும்போது, நானும் நனறி தெரிவித்துககொண்டு பேச்சைத் துவகக வேண்டும் என்று நினைக்கிறபோது அடுத்தக்கேள்வி என் சிந்தனையில் ஓடியது யாருக்கு நன்றி செலுத்துவது என்பது. அத்துடன் ஒரு எண்ணம் என் சிந்தனைக்கு வந்தது. எண்ணெய் துணியில் பட்டால், துணி அசிங்க மாகி விடுகிறது. காஸ்டிக் சோடா துணியில் பட்டால் துணி எரிந்து விடுகிறது. ஆனால் அதே காஸ்டிக் சோடாவையும் எண்ணெயையும் ஒன்றாகக் கலந்தால்தான் துணியை வெண்மையாக்கி வெளுக்கும் சோப்பாக்க முடிகிறது. அதுபோல் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும், முஸ்லீம் லீக்குக்கும் ஏற்பட்ட கூட்டின் பலனாக உருவாகிய சோப் போன்ற பதவி, M.L.C. பதவி எனக்குக் கிடைத்துள்ளது.

SRI K. RAMADASS : காஸ்டிக் சோடா யார்? எண்ணெய் யார்?

SRI K. S. ABDUL WAHAB : அங்கத்தினர் அவர்களே இதைச் சிந்தனை செய்து கொள்ளவேண்டும். அம்மையார் அவர்கள் நன்றி செலுத்தியது போல், தனிப்பட்ட ஒருவருக்கு நன்றி செலுத்துவது எனக்குப் பொருந்தாது. நண்பர் எம்.ஜி.ஆர். நன்றி செலுத்தியதுபோல் தனிப்பட்ட ஒரு கட்சிக்கு மட்டும் நான் நன்றி செலுத்துவதும் சரியல்ல. ஆக்வே முதற்கண் நான் முஸ்லீம் லீக் கட்சிக்கு நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன். அடுத்து என்னை ஆதரித்த திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு எனது நன்றியறிதலை தெரிவித்துக்கொண்டு என் பேச்சைத் துவங்குகிறேன்.

தலைவர் அவர்களே, நான் கவர்னர் அவர்களின் உரையின்போது அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டேன். என்னைப்போன்று நூற்றுக் கணக்கான நண்பர்கள் கலந்துகொண்டார்கள். ஆனால் நான் கலந்து கொண்டதை மட்டும் தனித்து எடுத்து பத்திரிகைகளில் விளம்பரப் படுத்தியதைப் பார்த்தேன். அது தனித்து முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டுமா என்பது ஒரு பிரச்னை. நான் அந்தக் கூட்டத்தில் கலநது கொண்டது என்னுடைய சக நண்பர்களில் சிலருக்குச் சிறிது வருத்தம கொடுத்திருக்கும் என்பதை அறிவேன். அதைப்போலவே எதிர்க்கட்சியில் உள்ள சில அங்கத்தினர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்திருக்கும் என்பதை யும் அறிவேன். இதையே சில நண்பர்கள் இந்தச் செயல் நன்றிகெட்ட செயல் என்று நினைத்திருப்பார்கள். என்னைப் பார்க்கும்போது நான் நன்றி கெட்டவன் என்ற நிலையில் காட்சி அளிக்கிறேனா என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். நான் சார்ந்துள்ள கட்சியும், நான் சார்ந்த சமுதாயமும் இந்த உலகத்திற்கு நன்றிக்கு எடுத்துக்காட்டாக அமைந் துள்ளவை என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். முஸ்லிம் லீக்குக் கும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் ஏற்பட்ட கூட்டு தேர்தல்

கூட்டு மட்டும்தான். அந்தக் கூட்டு இனி வரக்கூடிய தேர்தல்களிலும் தொடரும் என்பது என் அபிப்பிராயம். நமது அடிப்படை கொள்கை களிலே இரண்டு கட்சிகளுக்கும் சில வித்தியாசங்கள் உண்டு. அடிப்படை கொள்கைகளை பாதிக்காது. எல்லா பிரச்னைகளிலும் நான் பரிபூர்ண மாக அவர்களுடன் ஒத்துழைப்பேன் என்பதை நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். கவர்னர் என்பது கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்ட ஒரு பதவி. அது கட்சியிலே சிரத்தைகொண்டவர்களுக்கு அளிக்கப்படக் கூடாது என்பது என்னுடைய அபிப்பிராயம். திறமையும், தகுதியும், பாரபட்சமும் அற்ற அரசாங்க நிர்வாகத்தில் உள்ள அதிகாரிக்கு அந்தப் பதவி அளிக்கப்படவேண்டும் என்ற கொள்கையைக் கொண்டவர்கள் நாம்.

தலைவர் அவர்களே, நான் இங்கு வரும் சந்தர்ப்பத்தில், இந்த மன்றத்தில் பேசப்படும் பேச்சுக்கள் ஒரு உயர்தர பாணியில், உயர்ந்த தரத்தில் அமையும் என்று கற்பனை செய்து கொண்டிருந்தேன். பதவிப் பிரமாணம் எடுத்துக்கொண்ட அன்று, சட்டமன்றத் தலைவர் ஆற்றிய உரை என்னுடைய கற்பனையை ஊர்ஜிதம் செய்யக்கூடியதாக இருந்தது.
3-20 p.m. அதைத் தொடர்ந்து நடந்த விவாதங்களைக் கேட்டபோது நான் மகிழ்ச்சி அடைந்தேன். இரண்டு அங்கத்தினர்களைத் தவிர, பாக்கி எல்லோரும் உயர்ந்த தரத்தில் பேசினார்கள். ஒரு அங்கத்தினர் பேசும் சமயத்தில் அவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் விஷயத்திற்கு சம்பந்தம் இல்லாத வகையில் அவர் ஒரு சமுதாயத்தின் மீது வெறுப்பு விஷத்தைக் கக்கும் பாணியில் பேசியதைப் பார்த்து மிகவும் வருந்தினேன். இங்கே பேசப் படுவது கவர்னர் உரையின் மீது விவாதமா அல்லது முஸ்லீம் லீக் இந்த நாட்டுக்குத் தேவையா அல்லது தேவை இல்லையா என்ற பிரச்னை யின் மீது விவாதமா என்று சந்தேகப்படும்படி இருந்தது அவர் பேச்சு. பேசுகிறவர்கள் ஆத்திரப்பட்டால் பலன் இல்லை. நிதானத்துடன் பேசினால்தான் எந்த ஒரு பிரச்னையும் தீர்க்க முடியும். திடீரென்று முஸ்லீம் லீக்கைத் தாக்க முற்படுவது ஏன் என்பது எனக்குப் புரியவில்லை.

அங்கத்தினர் முஸ்லீம் லீக் மீது பாய எந்த சம்பவம் அவரை தூண்டி விட்டது என்பது தெரியவில்லை. முஸ்லீம் லீக் பெயரைக் கேட்டவுடனே நெருப்பை மிதித்த குழந்தை துடிப்பதுபோல அங்கத்தினர் ஏன் துடிக்க வேண்டும் ? உணர்ச்சி வசப்பட்டு, ஆவேசத்துடன் பேசிவிடுவதால் எந்த விஷயத்தையும் தீர்க்க முடியாது.

எனது மதிப்பு மிக்க நண்பர் திரு. எம். ஜி. இராமச்சந்திரன் கூறியது போல், பந்து வீசுபவர்கள் எந்த வேகத்துடன் பந்து வீசுகிறார்களோ அந்த வேகத்துடன் அது திரும்பி வரும் என்பதைத் தெரிந்து கொண்டு அங்கத்தினர்கள் தாக்கிப் பேச வேண்டும் என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். கவர்னர் அவர்கள் உரையிலே தேர்தல் முடிந்தது. தேர்தலுடைய பரபரப்பு முடிந்தது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. தேர்தல் முடிந்தது என்பது உண்மை. தேர்தலுடைய பரபரப்பு முடிந்த தாக நான் ஒப்புக்கொள்ள முடியாது. தேர்தலின் reaction என்று சொல்லக்கூடிய விதத்திலே இன்று பல இடங்களிலே பலாத் காரங்கள் தூண்டப்பட்டு வருகின்றன. இவற்றுக்கு குறிப்பாக இரையாக்கப் படுபவர்கள் முஸ்லீம்கள். கூட்டின் காரணமாக முஸ்லீம்கள் ஆங் காங்கு தி.மு. கழகத்திற்கு 100 க்கு 90 க்கு மேல் வாக்களித்தார்கள் என்பது யாவரும் அறிந்த உண்மை. இதைத் தெரிந்த மாற்றுக்கட்சிக் காரர்கள் ஆத்திரப்பட்டு முஸ்லீம்கள் மீது வஞ்சம் தீர்க்கக் கூடிய நிலை யில் செயல்கள் செய்ய முற்பட்டிருக்கிறார்கள். பல இடங்களிலே கலவரங்கள் செய்ய முயற்சிகள் எடுக்கப்பட்டிருக்கின்றன. ஆங்காங்கு போலீசுக்கும் அதிகாரிகளுக்கும் நாம் விஷயங்களைத் தெரிவித்து அதிகா ரிகள் சென்று ஓரளவு பாதுகாப்பு அளித்து அடக்கியிருக்கிறார்கள். இவை அகஸ்மாத்தாக ஒன்றிரண்டு இடங்களில் ஏற்பட்ட சம்பவங்களா ? ஒரே விதமான சம்பவங்கள் நாட்டின் பல இடங்களில் ஏற்படுவதைப்பார்க்கும் போது, இது மாகாண ரீதியில் திட்டமிடப்பட்டு செய்யப்படுகிறதோ என்று சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. திட்டமிட்டு செய்யப்படுகிறதோ அல்லது அகஸ்மாத்தாக நடைபெறுகிறதோ, இந்த சம்பவங்களை நல்ல முறையிலே அடக்கி முஸ்லீம்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டியது இந்த

26th April 1962] [Sri K. S. Abdul Wahab]

அரசாங்கத்தின் கடமை ஆகும். பொதுமக்கள் மட்டும் ஆத்திரப்பட்டுச் செய்கிறார்கள் என்பது ஒருபுறமிருக்க, ஒரு சில இடங்களிலே அதிகாரிகள் கூட இதற்கு உடந்தையாக இருப்பதை மிகுந்த மன வருத்தத்தோடு தெரிவிக்க வேண்டியிருக்கிறது. உதாரணமாகச் சொல்லவேண்டுமானால் ஒவ்வொரு சம்பவத்தையும் குறிக்க முற்பட்டால், ஒவ்வொன்றையும் வருணிக்க 15 நிமிஷம் ஆகும். ஒன்றிரண்டைமட்டும் குறிப்பிட்டுவிட்டு மேலே தொடருகிறேன். பனையூர் என்ற கிராமத்திலே இந்த சம்பவம் நடந்தது. அதைப் பற்றி அரசாங்கம் விசாரணை நடத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். குளத்தூரில் ஒரு அதிகாரி முஸ்லீம்களை மிரட்ட முற்பட்டு அதைப்பற்றி கவர்ன்மெண்டுக்கு complaint சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. இதையும் விசாரிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இலுப்பூரில் இது போன்ற சம்பவம் நடந்திருக்கிறது. இதையும் அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன். இன்னும் பல இடங்களில் இது போன்ற சம்பவங்கள் நடக்கின்றன. இந்த நாட்டிலே முஸ்லீம்களுக்கு தக்க பாதுகாப்பு அளிக்கப்பட வேண்டும் என்பதுதான் எங்கள் கோரிக்கை. இதைக் கடமை என்று நினைத்து அரசாங்கம் செயல்பட வேண்டும். முஸ்லீம்களுடைய குறைகளை நிவர்த்திக்க அரசாங்கம் ஒரு கமிட்டி ஏற்படுத்தி அந்தக் கமிட்டி சுற்றிப்பார்த்து நாட்டில் உள்ள சூழ்நிலையை விசாரித்து அவைகளை நிவர்த்திப்பதற்கு யோசனைகளை கவர்ன்மெண்டுக்கு சமர்ப்பித்து அந்த யோசனைகள் சட்ட மன்றத்தின் அங்கீகாரத்தின பேரில் செயல்பட வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்து, கவர்னர் அவர்கள் ஆற்றிய உரையிலே இந்த ஆண்டில் கட்டாயக் கல்வி அமுல்படுத்தப்படுவதாகச் சொன்னார்கள். இது வரவேற்கத்தக்கது. கட்டாயக் கல்வி உண்மையிலேயே பூரண வெற்றி அடைந்தால், உலக அரங்கிலே பிற்போக்கு நாடு என்ற பெயர் வாங்கி இருக்கும் நம்நாடு வெகு விரைவிலே சில ஆண்டுகளிலே முற்போக்கு நாடு என்ற அழைப்புக்கு உரியதாக்கக் கூடியது இந்தத் திட்டம். வேறு திட்டங்களைச் சிறிது ஒதுக்கி வைக்கும் நிலை ஏற்பட்டாலும், இதை எவ்வளவுக்கெவ்வளவு துரிதப்படுத்தி அமுல் நடத்தமுடியுமோ, அதைச் செய்ய அரசாங்கம் சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அத்துடன் இந்தத் திட்டத்தை அமுல் நடத்துவதில், சில சிக்கல்கள் தொக்கி நிற்கின்றன. அவைகளைத் தீர்க்காமல் திட்டம் அமுல் நடத்தப்பட்டால், நிச்சயமாக சில பயங்கர எதிர்பாராத நிகழ்ச்சிகள் உருவாக ஏது ஏற்படும். உதாரணமாகச் சொல்லவேண்டுமேயானால், கட்டாயக் கல்வி என்று சொல்லும்போது படிக்காத ஒவ்வொரு சிறுவனையும் பலவந்தமாகப் பள்ளிக்கு அழைத்துச் செல்லக் கூடிய நிலை இருக்கிறது. எத்தனையோ சிறுவர்கள் வாழ்க்கை நடத்த முடியாமல் பல வேலைகள் செய்து தொழிற்சாலையில் ஊழியம் செய்து ஜீவனத்தை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். அந்தச் சிறுவர்களின் வருவாயைக் கொண்டு எத்தனை விதவைத் தாயார்கள், தங்கைமார்கள், தம்பிமார்கள் அனாதையாக உள்ளவர்கள் குடும்பம் நடத்த வேண்டியிருக்கிறது என்பதைப் பற்றிச் சிந்தனை செய்யவேண்டும். திடீரென்று இந்தச் சிறார்களைப் பிடித்துப் பள்ளியில் வைத்துவிட்டால், அவர்களுடைய வரும்படியை நம்பி இருந்தவர்களின் கதி என்னவாகும்? அவர்களுக்கும் பாதுகாப்பு அளிக்க இந்த அரசாங்கம் கடமைப்பட்டது. கட்டாயக் கல்வித் திட்டம் என்பது சாதாரண விஷயம் இல்லை. அதை அமுல் நடத்த பெருந் தொகையைச் செலவு செய்ய வேண்டும். சிறுவர்களை நம்பி வாழுகிறவர்களுக்கும் சேர்த்து ஆதரவு அளிக்க முனையும்போது இதன் பலன் இன்னும் அதிகமாகக் கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை. அப்படிச் செய்வது சாத்தியமில்லாதது அல்ல என்பது என் கருத்து. ஆனால் இப்போதுள்ள பொருளாதார நிலையில் இது சாத்தியமில்லாமல் இருக்கலாம் என்று நினைக்கிறேன். எனினும் இது அரசாங்கத்தின் கவனத்தில் இருக்கவேண்டும் என்று விரும்புகிறேன். இப்போதைய நிலையில் அந்தச் சிறுவர்களுக்குப் படிப்பு, மதிய உணவு மட்டும் கொடுத்தால் போதாது. அவர்களுக்கு உடுத்த உடையும், 3 வேளை உணவும், இருப்பதற்கு இட வசதியும் இருந்தால்தான் அவர்களுக்கு உருப்படியான பலன் கிடைக்கும். அப்படியில்லாமல் வெறும் படிப்பும் மதிய

3-30 p.m.

உணவும் மட்டும் கொடுத்துவிட்டால், படித்துவிட்டு மத்தியான உணவு சாப்பிட்டுவிட்டு ரோட்டிலே திரிந்தால் அவர்கள் தங்கள் மற்றத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள, திருடர்களாகவும் பிக்பாக்கட்டுகளாகவும், ரௌடிகளாகவும் மாற நாம் வகை செய்து கொடுத்தவர்கள் ஆவோம். ஆகவே நான் சொல்லுவது—அப்படிப் படிக்கக்கூடியவர்களுக்கு இட வசதியும், உணவு உடை வசதியும் பூரணமாக அளித்து பாதுகாக்க வேண்டும் என்பதே. நான் சொல்லுவது ஒன்றும் புதிதான திட்டம் அல்ல. இங்கிலாந்திலே, ரஷியாவிலே, அமெரிக்காவிலே கட்டாயக் கல்வி உண்டு. அங்கே எல்லாம் ஹாஸ்டல்களில் பையன்களை வைத்து உணவு, இடம், உடை யாவும் அளித்து அரசாங்கம் அவர்களைப் பராமரிக்கிறது. இந்த அடிப்படையிலே இந்தத் திட்டம் நடத்தப்பட்டால்தான், அது வெற்றியாக முடியும். இந்த அடிப்படை இல்லாமல் பேருக்குத் திட்டம் நடத்தப்படுமேயானால், நிச்சயமாகச் சொல்லுகிறேன் நாம் எந்தப் பலனை நோக்கத்தில் வைத்து திட்டத்தை அமுல் நடத்துகிறோமோ, அதற்கு நேர்மாறான பலனைத்தான் பெறுவோம்.

தலைவரவர்களே, நேற்று முன்தினம் பேசிய ஒரு அங்கத்தினர் மதிய உணவைப் பற்றிப் பேசும்போது உபாத்தியாயர்கள் சமையல்காரர்களாகவும், ஸ்கூல்கள் சத்திரங்களாகவும் மாறியிருப்பதாக சொன்னார்கள். என்னிடத்திலேயும் பல உபாத்தியாயர்கள் கண்ணீர் வடித்த வகையிலே சொன்னார்கள். தாங்கள் சமையல்காரர்களாகமாறி விட்ட சம்பவங்களை. இது மிகவும் சிந்தனை செலுத்தவேண்டிய விஷயம். அதைத் தீர்ப்பதற்கு சகோதரர் சொன்ன யோசனை பையன்களுக்குக் கூப்பன்களைக் கொடுத்து, ஒரு மத்தியமான இடத்தில் ஆகாரத்தை ஆக்கி அந்த இடத்தில் அவர்கள் வந்து சாப்பிட்டுவிட்டுப் போய்விடலாம் என்பது. அத்துடன் நானும் என் அபிப்பிராயத்தைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். பையன்கள் ஒரு இடத்தில் போய்விட்டு சாப்பிட்டு வரவேண்டும் என்றால் சில சந்தர்ப்பங்களில் அந்த இடம் ஸ்கூலிலிருந்து பல மைல் தூரத்தில் அமையலாம். சின்னஞ்சிறு சிறார்கள் அவ்வளவு தூரம் வெயிலிலே மதிய உணவுக்காக வந்து போவது புதிய பல சிக்கல்களை உருவாக்கலாம். அது அவ்வளவு வெற்றிகரமாக முடியும் என்று நான் நினைக்கவில்லை. இரயில்வே பிளாட்பாரங்களில் தயிர் சாதம் பொட்டணங்கள் கட்டி விற்கிறார்கள். அதுபோல ஒரு இடத்தில் சாப்பாட்டை ஆக்கி பொட்டணங்களாக அதைக்கட்டி இந்த இந்த ஸ்கூலுக்கு இவ்வளவு பொட்டணங்கள் என்று கணக்கிட்டு பட்டுவாடா செய்வது மிகவும் நல்ல முறையில் வெற்றிகரமாக முடியும் என்பது என் சொந்த அபிப்பிராயம். இது செய்யப்படவில்லையென்றால் அரசாங்கம் தன் சொந்தச்செலவில் ஒரு ஸ்கூலுக்கு ஒரு சமையல்காரரை நியமிக்க வேண்டியது அவசியமானது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். இவ்வளவு நேரம் பேச அனுமதிக்கப்பட்ட நான் மற்றொரு விஷயமும் சொல்லி முடிக்க விரும்புகிறேன். இங்கு வந்த பிறகு என்னுடைய சகாக்கள் பத்திரிகையில் வந்த ஒரு செய்தியை எனக்குப் படித்துக்காட்டினார்கள். ஒரு ஐந்து நிமிடங்களுக்கு முன்பு அதைப் படித்தேன். அதிலே பாகிஸ்தானிலிருந்து சில அதிகாரிகள் சொன்னதாக ஒரு செய்தி இருந்தது. இந்தியாமீது படையெடுக்கக் கூடிய நிலை வந்தால் காஷ்மீர் மட்டுமல்ல, டில்லி வரையில் மட்டுமல்ல, மதராசையும் நாங்கள் கைப்பிடித்துவிடுவோம் என்று அவர்கள் பேசியதாக ஒரு செய்தியைப் பார்த்தேன். இதைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் நான் சொல்லவேண்டியது அவசியமென்றும் நினைக்கிறேன். ஆனால் அப்படிப் படையெடுத்து வரக்கூடிய நிலை வந்தால், அவர்களை எதிர்த்து அவர்களை விரட்டி அடிக்கக்கூடிய புனிதப் போரின் முன்னணியிலே எங்களுடைய முஸ்லீம் லீக் அங்கத்தினர்கள் இருப்பார்கள் என்பதை இங்கு உறுதியாகக் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். என்னுடைய சகாக்களிடம் பேசிக்கொண்டிருந்தபோது அவர்கள், நீங்கள் முன்னணியில் இருந்தால், நாங்களும் தொடர்ந்துவந்து எதிர்த்துப் போராடத் தயாராக இருப்பதற்கு உறுதி கூறுகிறோம் என்று சொன்னார்கள். அதற்கு அவர்களுக்கு நன்றி சொல்லிக்கொண்டு இவ்வளவு நேரம் பேச அனுமதியளித்த சட்டமன்றத் தலைவர் அவர்களுக்கும் நன்றி கூறிக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

26th April 1962]

SRI S. K. SAMBANDHAN : கனம் தலைவர் அவர்களே, பொதுத் தேர்தலில் பெருவாரியாக வெற்றிபெற்று அமைதியான சூழ் நிலையில் அடக்கமான அமைச்சரவை ஏற்படுத்தி அரசாங்கம் நல்ல முறையில் நடத்திவரும் முதன் மந்திரி அவர்களுக்கும் அவர்களுடைய சக மந்திரிகளுக்கும் என்னுடைய பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள் கிறேன்.

அடுத்து, கவர்னர் அவர்கள் உரையில் சொல்லியிருக்கிறபடி மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முதலாவது ஆண்டிலும் அதற்கு முன் திட்டங்களிலும் செய்த நல்ல காரியங்களுக்காக அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். நல்ல காரியங்கள் பல செய்திருந்தாலும்கூட, அரசாங்கம் எந்தெந்த முறையிலே செய்திருந்தால், இன்னும் மக்கள் அதை அதிகமாகப் பயன்படுத்தியிருப்பார்கள் என்பதையும் நாம் கவனித்துப் பார்க்கவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு ஒரு சில குறைகளையும் குறிப்பிட விரும்புகிறேன்.

கவர்னர் அவர்களுடைய உரையிலே பண வசதி மட்டும் திட்டத்தை நிறைவேற்றுவதற்குப் போதாது, அதோடு நல்ல திறமையான நிர்வாகம் இல்லையென்றால் ஒன்றும் சரியாக நடத்தமுடியாது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். பல ஆண்டுகளுக்கு முன் நமது நாட்டிலே இருந்த நிர்வாகத் திறமையையும் இப்போது ஒவ்வொரு அலுவலகத்திலும் உள்ள அலுவலர்கள் நிலையையும் ஒப்பிட்டுப்பார்த்தால், எண்ணிக்கை யில் அதிகமாகப் பெருகிக்கொண்டே போகிறதே தவிர, நிர்வாகத் திறமை அந்த அளவுக்கு இருக்கிறதா என்பதை அமைச்சர்கள் அதிகமாகத் தெரிந்திருப்பார்கள் என்று நம்புகிறேன். இருந்தாலும் அவர்கள் என் ஒன்றுந்தெரியாத நிலையில் இருக்கிறார்களோ தெரியவில்லை. ஒருக்கால் இவையெல்லாம் தானாகவே சரியாகிவிடும் என்று நினைக்கிறார்களா என்று சந்தேகப்படக்கூடிய நிலையில் இருக்கிறார்களோ என்று எனக்குப் புரியவில்லை. பக்கத்தில் இருக்கும் நண்பர்கூட பேசும்போது, நிர்வாகத் துறையில் எவ்வளவு ஊழல்கள் ஏற்பட்டுவிட்டன, சாதாரண ஏழை மக்கள் ஒரு சின்ன அத்தாட்சிப் பத்திரம் பெறுவதற்குக்கூட எவ்வளவு சிரமப்படுகிறார்கள் என்று எடுத்துக் கூறினார்கள். அவர்கள் கூறியது ஒரு பங்கு என்றுதான் சொல்லவேண்டும். அதைப்போல பல மடங்கு சிரமங்கள் இன்று சாதாரண மக்களுக்கு அன்றாட நிகழ்ச்சிகளில் ஏற்படக்கூடிய நிலை இருக்கிறது. தாலுகா அலுவலகங்கள் உள்ள இடங் களில் நடக்கின்ற கொடுமைகளை என்னால் பார்க்க முடிகின்றது. என்னைப் போன்ற சட்டமன்ற உறுப்பினர்கள் ஒரு நாளிலே முடிக்கவேண்டிய காரியங்களை ஒரு மாதத்தில்கூட சாதிக்க முடியவில்லை. உண்மையான தொண்டு செய்ய எண்ணுகின்றவர்கள், உறுப்பினர் நிலையிலே உள்ள வர்கள், நாள் கடக்காத வகையில் சாதித்துக் கொள்ள முடியாத நிலையில் இருக்கிறார்கள் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன். சட்ட மன்றத்திலே உள்ள அங்கத்தினர்களுக்கே இந்த நிலை இருக்குமானால் சாதாரண மக்களுக்கு எந்தவகையில் காரியங்கள் நிறைவேறும்? அரசாங்கம் நல்ல எண்ணத்தோடு எந்த நல்ல காரியங்கள் செய்தாலும் எந்தச் சலுகைகளை அளித்தாலும் அது உடனடியாக சாதாரண மக்களுக்குப் பயன்படுகிறதா என்று பார்க்கவேண்டும். அவர்களுடைய கஷ்டங்கள் உடனுக்குடன் போக்கப்படுவதற்கு என்னென்ன செய்யவேண்டுமோ அதை உடனடியாகச் செய்யவேண்டுமென்று அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்து கொள்கிறேன். 3 40. p.m.

அடுத்தபடியாக, பஞ்சாயத்து யூனியன்களை ஏற்படுத்தி, அதிகாரத்தைப் பெரிய இடத்திலிருந்து அதாவது சென்னையிலுள்ள தலைமை பீடத்திலிருந்து மக்களுக்குக் கொடுத்திருக்கிறோம் என்று கவர்னர் அவர்கள் மகிழ்ச்சி தெரி வித்திருக்கிறார்கள். நாமும் அதைப்பற்றி மகிழ்ச்சி அடையவேண்டியது தான். ஆனால் பஞ்சாயத்து யூனியன்கள் எந்த அளவிலே நடைபெற்று வருகின்றன, அவைகளுக்கு எந்த அளவிலே அதிகாரங்கள் கொடுக்கப் பட்டு வருகின்றன என்பதை அவ்வப்போது அரசாங்கம் அலசிப்பார்க்க வேண்டும். அதைக் கண்காணித்து வரவேண்டுமென்றும் கேட்டுக்

[Sri S. K. Sambandhan] [26th April 1962

கொள்கிறேன். எந்தவிதமான அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது என்பதற்கு ஒரு சிறு உதாரணம் சொல்ல விரும்புகிறேன். சென்ற ஆண்டிலிருந்து நம் நாட்டிலுள்ள எல்லா பஞ்சாயத்து யூனியன்களும் செயல்பட ஆரம்பித்தன. அதற்குப் பிறகு இரண்டு மாதங்கள் கழித்தோ என்னவோ அரசாங்கம் ஒரு உத்திரவு போட்டிருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் தலைவர்கள் தங்களுடைய நிர்வாகத்தின்கீழ் இருக்கும் ஆரம்பப் பாடசாலைகளுக்குச் சென்று பார்வையிடுவது official visit ஆகாது, அப்படி கருதப்படவும் மாட்டாது என்று ஒரு ஜி.ஒ. அரசாங்கம் போட்டிருக்கிறார்கள். இதை நினைத்தால் சிரிப்பதா அழுவதா என்ற நிலைமைதான் ஏற்படுகிறது. மக்களுக்கு அதிகாரத்தை வழங்கிவிட்டோம் என்று பஞ்சாயத்து யூனியன்கள் ஏற்படுத்தி அந்த யூனியன்களுக்கு பஞ்சாயத்துத் தலைவர் ஒருவரையே தேர்ந்தெடுத்து, அவர்களுக்குக் கீழ் ஆரம்பப் பள்ளிகளின் கண்காணிப்பு வேலையைக் கொடுத்துவிட்டு, அந்தப் பள்ளிக்கூடங்களைப் போய் மேற்பார்வை செய்வது என்றால் அது அதிகாரபூர்வமானதாக இருக்காது என்று அரசாங்கம் சொல்லுகிறது என்றால் அதை என்னவென்று நினைப்பது? இதை மீண்டும் சீர்தூக்கிப்பார்க்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். இந்தமாதிரி அதிகாரங்களைப் பஞ்சாயத்துக்களுக்கு எவ்வளவு கொடுத்தாலும் போதாது. அதற்குப்பதிலாக அரசாங்கமே இவற்றை எல்லாம் தன்னிடத்திலேயே வைத்துக்கொண்டு வேலை செய்வது நலமாக இருக்குமென்று குறிப்பிட விரும்புகிறேன். உதாரணத்திற்கு இதைச் சொன்னேன். பஞ்சாயத்து யூனியன்கள் ஏற்படுத்திவிட்டோமே தவிர, போதுமான அதிகாரமும் நிதிவசதியும் இல்லாமல் பஞ்சாயத்து யூனியன்களின் நிலைமையில் முன்னேற்றம் காணவேண்டுமென்று எத்தனை திட்டங்களைப் போட்டாலும் நிறைவேறாது. கிராமபுறங்களில் இருக்கிற மக்கள் சுகமடைய முடியாது என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்ததாக, ஆரம்பப் பள்ளிகள்பற்றி எல்லோரும் சொன்னார்கள். கட்டாயக் கல்வி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது என்பதை பற்றியும் சொன்னார்கள். எல்லோரும் மகிழ்ச்சியடையக்கூடியது தான். ஆனால் கல்வியின் தரம் எந்த அளவில் இருக்கிறது என்பதை ஒவ்வொரு ஆண்டும் கொஞ்சகாலத்திற்கு ஒரு பத்தாண்டு காலத்திற்கு அவர்கள் ஆராய்ந்து பார்த்தால் நல்லது. அதிலுள்ள தரக்குறைவையும், கெடுதல்களையும் கண்டு, நல்லது இருந்தால் இன்னும் நல்லது செய்வதற்கு வசதி செய்து கொடுக்க அரசாங்கம் முயற்சி செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இப்பொழுது பள்ளிக்கூடங்களிலே சொல்லிக்கொடுக்கப்படும் படிப்பானது பத்து ஆண்டுகளுக்கு முன்னாலே அல்லது இருபது ஆண்டுகளுக்கு முன்னால் இருந்த படிப்பை விட மிகமிக தரக்குறைவாக இருக்கிறது என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். நண்பர் ஒருவர் சொன்னார் செகண்டரி படிப்புதரம் மோசமாகக் குறைந்துவிட்டது. அதைவிட முக்கியமானது ஆரம்பப் பள்ளிப்படிப்பு. இந்த ஆரம்பப் படிப்பின் தரம் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வருகிறது. இதை அரசாங்கம் உணர்ந்து அதற்கான வழிவகை செய்யவேண்டும் என்று நான் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். இந்தக் கல்வியைப்பற்றிச் சொல்லுகிறபோது, ஆசிரியர்களைப் பற்றி நமது நண்பர்கள் பலர் எடுத்து சொன்னார்கள். முக்கியமாக அரசாங்கப் பள்ளிக்கூடங்களில் இருக்கும் ஆசிரியர்களுக்கும், தனிப்பட்டவர்கள் நடத்தும் பள்ளிக்கூடங்களில் இருக்கும் ஆசிரியர்களுக்கும் இருக்கிற தொகை வித்தியாசத்தை முக்கியமாக அவசியமாக, உடனடியாக, அரசாங்கம் கவனித்து நீக்க வேண்டும். சாதாரண சின்ன விஷயத்தில்கூட, இந்த வித்தியாசம் இருந்து வருகிறது. உதாரணமாக அரசாங்கப் பள்ளிக்கூடங்களில் இருக்கும் ஆசிரியர்கள் மேற்பார்வை அலுவலுக்காக வேறு எங்கேனும் போடப்பட்டால், அவர்களுக்குக் கொடுக்கப்படும் allowance, remuneration க்கும் சாதாரண பள்ளிக்கூடங்களிலிருந்து அதே மேற்பார்வை வேலைக்குப் போடப்படும் அந்தப் பள்ளிக்கூடங்களுடைய ஆசிரியர்களுக்கு கொடுக்கப்படும் allowance-க்கும் வித்தியாசம் இருக்கிறது. அடுத்தபடியாக, முக்கியமாக நண்பர்கள் சொன்னதுபோல் S.S.L.C. படித்து விட்டு Lower Division Clerk-ஆக, குமாஸ்தாவாகப் போகும் அந்த குமாஸ்தாவுக்கும், S.S.L.C. படித்து விட்டு இரண்டு ஆண்டுகள்

26th April 1962] [Sri S. K. Sambandhan]

ஆசிரியராக வேண்டுமென்று பயிற்சி பெற்று கஷ்டப்பட்டு ஆசிரியர் பதவி அடைந்து உள்ளவர்களுக்கும் இருக்கும் சம்பள வித்திபாசத்தை உடனடியாகக் கவனித்து நீக்கவேண்டிய என்பதை அரசாங்கத்திற்குத் தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். சென்னை போன்ற நகரங்களில் உள்ளவர்களுக்கு வீட்டு வாடகை allowance உடனடியாகக் கிடைக்க அரசாங்கம் ஆவன செய்து கொடுக்க வேண்டும் என்றுநான் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன். நான் பல இடங்களில் பல ஆசிரியர்களைச் சந்தித்துக் கேட்ட போது, சென்னை, மதுரை போன்ற நகரங்களில் உள்ள ஆசிரியர்களைச் சந்தித்துக் கேட்டபோது, இதைத்தான் முதலாவதாக எடுத்துச் சொன்னார்கள். எடுத்துச் சொன்னார்கள் என்று சொன்னால் சாதாரணமாக சின்ன விஷயம். தனிப்பட்டவர்கள் நடத்தும் பள்ளிக்கூடங்கள் இந்தப் பெரிய நகரங்களில் அதிகமாக இருந்தாலும், ஆசிரியர்கள் எண்ணிக்கையை எடுத்துக்கொண்டால், ஓரளவுதான் இருக்கும். அவர்களுக்கு இந்த வீட்டு வாடகை கிடைக்கச் செய்ய வேண்டிய என்பதில் அரசாங்கத்திற்கு இவ்வளவு நாள் அக்கறை இல்லாது இருந்ததை நினைத்துப் பார்த்தால் வேடிக்கையாக இருக்கிறது. கார்ப்பரேஷனில் இருக்கக்கூடிய கடைத்தர சிப்பந்திகளுக்குக் கூட வீட்டு வாடகை வசதி கொடுக்கப்படுகிறது. முக்கியமான ஒரு நல்ல தொழிலைச்செய்யும் இந்த ஆசிரியர்களின் விஷயத்தில் ஏன் பாராமுகமாக இருக்கவேண்டும் என்பதுதான் எனக்குப் புரியவில்லை. இந்த மாதிரியான விஷயத்தில் பாராமுகமாக இருந்தால், அவர்களுடைய பஞ்ச பாவம் எந்த நிலையில் இருக்கும் என்பதை நினைத்துப் பார்க்கவேண்டும் என்று அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

விவசாயத்தில் நாம் உணவு உற்பத்தியைப் பெருக்கிக் கொண்டு வந்திருக்கிறோம். ஒன்பது லட்சம் டன் அதிகமாக இந்த இரண்டாவது திட்டத்தில் அதிகமாகி இருக்கிறது என்பதைக் கவனிக்க மகிழ்ச்சி அடைய வேண்டியதுதான். இந்தமாதிரி வேலைகளில், பலவேலைகளில் பணம் 3-30 p.m. விரயமாக்கப்படுகிறதே தவிர, மக்களுக்குப் பயன்படும் விதத்தில் இல்லை என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். உதாரணமாக ஒன்று சொல்லிக் கொள்ளுகிறேன். மண் அரிப்பு தடுப்பு வேலை நடந்த கொண்டு வருகிறது, மாநிலம் பூராவும். இந்த மண் அரிப்பு தடுப்பு வேலை எந்த அதிகாரியின்கீழ் யார் செய்து வருகிறார்கள் என்பதை நான் பலமுறை விசாரித்தும் தெரிந்து கொள்ளமுடியவில்லை. அதை மேற்கொண்டு விசாரிக்கவும் முடியவில்லை. மண் அரிப்பு தடுப்பு நடத்துகிற ஒரு ஊருக்குச் சென்று, ஒருவருடைய நிலத்தில், அந்த நிலச்சொந்தகாரருக்கும் சொல்லாமல் மண் அரிப்பு தடுப்பு வேலை என்று நடத்திய பிறகு சம்மதம் கேட்க வருகிறார்கள். செய்த பிறகு சம்மதம் கேட்கிறபோது, நிலச் சொந்தக்காரர்களுக்கு ஆச்சரியத்தை அளிக்கிறது. இதை அமைச்சர் அவர்கள் பரிசீலனை செய்து சொந்தக்காரர்களின் ஆதரவைப்பெற்று, சம்மதத்தைப் பெற்று, செய்யும்படிசொல்ல வேண்டும் என்று கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தது, முக்கியமாகத் தொழிலைப் பற்றி எல்லோரும் பேசினார்கள். தொழில் வளர்ச்சி அதிகமாக அடைந்திருப்பது எல்லோருக்கும் தெரியும். குறிப்பாக ஒரு சில மாநிலங்களைப் பார்த்து, நம் மாநில தொழில் வளர்ச்சியையும் பார்த்தால் ஓரளவு நாம் அதிக அளவில் வளர்ச்சி அடைந்திருக்கிறோம், நமக்குத் தொழில் வளம் இருக்கிறது என்று மகிழ்ச்சி அடையும் நிலை தான் இருக்கிறது. அதே நேரத்தில் நம்மை விட அதிகமாக முன்னேறியிருக்கிற வங்காளம்—மேற்கு வங்காளம்—போன்ற மாநிலங்களைப் பார்த்தால் நாம் இன்னும் வளர வேண்டிய நிலைமையில் தான் இருக்கிறோம். இந்தத் தொழில் வளர்ச்சிக்கு முக்கியமான நிலக்கரிக்கு அடிக்கடி பஞ்சம் ஏற்படுகிறது என்பதைத் தொழிலதிபர்கள் சொல்ல, இந்தச் சபையிலே அதை தொழிலதிபரான கனம் அங்கத்தினர் S. R. P. பொன்னுசாமி செட்டியார் குறிப்பிட்டார்கள். இந்த நிலக்கரியைப் பற்றி அடிக்கடி இந்தச் சபையிலும் கீழ் சபையிலும் குறிப்பிட்டிருக்கிறோம். குறிப்பிட்டுக் கொண்டே இருக்கிறோமே தவிர, அரசாங்கம் ஏன் நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியவில்லை என்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏதாவது நடவடிக்கை எடுத்துக்கொண்டிருந்தால், விலையைப் பற்றி ஒருவாறு இருந்தாலும், தட்டுப்பாடு இல்லாமல் கிடைப்பதற்கு வழி ஏற்பட்டு இருக்கக்கூடும். அரசாங்கம் தூங்குகிறதே என்பதைப்பற்றி நினைக்க

மிக மிக வருத்தமாக இருக்கிறது. இந்த நிலக்கரி சுலபமாகக் கிடைக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்பது மட்டுமல்லாமல், நாடு பூராவும் இந்திய நாடு பூராவும் ஒரே விலைக்குக் கிடைக்குமானால், தொழில் வளர்ச்சி, மற்ற மாநிலங்களில் ஏற்படாத அளவுக்கு நம்முடைய மாநிலத்தில் ஏற்படுவதற்கு துணையாக இருக்கும் என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். இந்த ஒரே விலை ஏற்படுவதற்கு என்னென்ன செய்ய வேண்டுமோ அதை உடனடியாகச் செய்யவேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

கைத்தறிக்கு வருகிறபோது, கைத்தறி நெசவாளர்கள் நிலையைப்பற்றி அங்கத்தினர்கள் சொல்லியிருக்கிறார்கள். கைத்தறி நெசவாளர்களுக்குக் கிடைக்கக்கூடிய நூல் அடிக்கடி விலை ஏறிக்கொண்டே இருக்கிறது என் பதை அமைச்சர் அவர்களுடைய கவனத்துக்குக் கொண்டு வர ஆசைப் படுகிறேன். இதற்குக் காரணம் புரிந்து கொள்ள முடியவில்லை. நமது மாநிலத்தில் கூட்டுறவு மில்கள் உள்ளன. பொதுவாக எனக்கு தெரியும் திருநெல்வேலியில் உள்ள கூட்டுறவு மில்லின் வருஷாந்திர லாபம், கடந்த இரண்டு ஆண்டுகளாக, கிட்டதட்ட ஐந்து லட்சம் ரூபாய். 50 லட்சம் மூலதனம் கொண்ட ஒரு மில்லுக்கு, கூட்டுறவு முறையில் நடத்தப்படும் ஒரு மில்லுக்கு 5 லட்சம் ரூபாய் ஆண்டு ஒன்றுக்கு லாபம் கிடைக்கிறது என்று சொன்னால், தனிப்பட்டவர்கள் மில்லுக்கு 10 அல்லது 20 லட்சம் ரூபாயில் நடத்தப்பட்டாலும் கூட, கண்டிப்பாக இந்த 5 லட்சத்திற்கு மேல் லாபம் வந்துதான் ஆகும் என்பதை இந்த சந்தர்ப்பத்தில் அமைச்சர் அவர்களுக்குச் சொல் லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அப்படியிருந்தும்கூட, விலையையைக் குறைப் பதற்கு அவர்கள் சம்மதிக்கவில்லை. அரசாங்கமும் தக்க ஏற்பாடு செய்ய வில்லை. தென்னாட்டிலிருந்து ஏற்றுமதியாகக்கூடிய பொருள், அதிகமான பொருள் கைத்தறித்துணி. அதற்குத் தேவையான நூல் சரிவரக் கிடைக்க வில்லை என்று அமைச்சர் அவர்களுக்கு நெசவாளர்கள் விண்ணப்பித் திருக்கிறார்கள் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். இருந்தும் நல்ல ஏற்றுமதி இருந்துதான் வருகிறது. நான் பல மாதங்களுக்கு முன்னால், ஒரு கேள்வி எழுதி அனுப்பினேன்; கடந்த நாலு ஆண்டுகளாகத் தென்னாட்டில் உற்பத்தி என்ன என்று. விடை அளிக்கப் பிரியம் இல்லையோ, என்ன காரணத்தாலோ விடை அளிக்கப் படாமல் இருந்து வருகிறது. கிட்டதட்ட ஒவ்வொரு ஆண்டும் அதிகமாகத் தான் உற்பத்தியாகிக் கொண்டிருக்கிறது அப்படி இருந்தும் விலை ஒவ்வொரு ஆண்டும் ஏறிக்கொண்டே இருக்கிறது என்றால், அதைத்தான் புரிந்து கொள்ள முடியவில்லை. அரசாங்கம் இன்னமும் வாளா இராமல், இந்தக் கைத்தறி நெசவாளர்கள் விஷயத்தில் தகுந்த அக்கறைகொண்டு, நூல் நியாய விலைக்குக் கைத்தறி நெசவாளர்களுக்குக் கிடைக்கக் கூடிய நிலைமையை ஏற்படுத்த வேண்டும் என்பதை நான் அமைச்சர் அவர் களுக்கு விண்ணப்பித்துச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

**Mr. CHAIRMAN** : The hon. Member's time is up. He has already taken 20 minutes. There are many more speakers for the day.

**Sri S. K. SAMBANDHAN** : I will finish my speech in two more minutes Sir.

நூல் கிடைப்பதோடு தரமான நூல் கிடைக்க வேண்டும். தரமான துணியை ஏற்றுமதி செய்யவேண்டும் என்று அமைச்சர் அவர்கள் அடிக்கடி குறிப்பிடுகிறார்கள். பிரதமர் முதற்கொண்டு ஏற்றுமதியில் அக்கறை உள்ள வர்கள் அனைவரும் சொல்லி வருகிறார்கள். இருந்தபோதிலும் தரமான துணி நெய்யவேண்டும் என்றால், தரமான நூல் இல்லாமல் நெய்ய முடியாது. கட்டுப்பாட்டுக்காகவோ அல்லது விலைக்கு சம்மதப்பட்டோ மில் காரர்கள் தரமான நூல் உற்பத்தி செய்வது இல்லை என்பது அமைச்ச ரவர்களுக்கு நன்றாகத் தெரியும். அந்த நிலைக்கு விட்டுவிடாமல் அவர்களை தரமான நூல் உற்பத்தி செய்யவேண்டும் என்று கட்டுப்படுத்த அமைச்சர் அவர்கள் ஆவன செய்ய வேண்டும் என்று சொல்லி முடித்துக் கொள்ளு கிறேன்.

26th April 1962]

MR. CHAIRMAN : I now fix ten minutes for each speaker. Sri M. Seshachariar will now speak.

SRI M. SESHACHARIAR : Mr. Chairman, Sir, while supporting the Resolution moved by my friend, I would like to say a few words. First I would like to mention how we have made great progress in industries. I find that our industries have attracted the attention of everybody. Our industrial estate in Guindy has been praised by very many. It is said and I also read in the papers that the Industries Minister at the Centre has exhorted the Industries Ministers of other States to follow the Madras plan and to see that such industrial estates are started in their own States. It is because they have in one or two cases failed. The Central Industrial Corporation that is started in one or two States has not worked properly. It may be all right in regard to the industrial estates where people have started their industries. But as regards others the people have got to consider the matter very carefully. Most of the people are graduates—mechanical engineering graduates—who know much of engineering and who want to start engineering industries. It may be all right for bigger industries. For small industries, we require initial capital, risk capital or the equity capital, as they callit. We may have Industrial Corporations at the Centre as well as in our State. There is also the Industrial Loans Act. Even there, we want tangible security—unencumbered security. It is impossible for a person who starts a business to give security at the initial stages. The industry must first get settled. In the case of persons who have purchased lands and put up factories, it will be possible to borrow money as matters stand at present. There is the other side of the matter to be considered. When once the business starts, raw materials have to be purchased. I think the Government are not advancing any money for working expenses. At least the commercial banks are advancing money for the purchase of raw materials on the pledge of the raw materials or finished product. But Government are not advancnig for any of these things. I would like to say that in both these stages, the Government have to step in so that they can help these people.

Certain machines can be purchased though the Central Industries Corporation under the hire-purchase system. The Government also give loans to certain small industries. In all these matters there is a certain amount of avoidable delay. The Government should see that the loans are sanctioned much earlier than at present.

One other aspect I would like to mention. Certain industries are started in the co-operative sector. The difficulty in all these cases is this. We have appointed certain persons who are Mechanical Engineering Graduates, who have very little of business training. In certain places I have often found that engineers who are appointed as Secretaries or Superintendents of the industries,

after any breakdown, write to the companies for quotations. It is not possible for them to foresee the difficulties that might arise for want of spare parts. When tenders are called for, they come from a number of, companies. It takes some time. Meanwhile, the work suffers and production suffers. The workmen are there without any work for days together. I would like to say that the person must be given training before they are asked to take up any kind of business. It is only in the co-operative field I find this difficulty. I have seen it myself. Therefore, Sir, I say that in all these cases the personnel have to be given some kind of training before they are employed.

4-00 p.m. Sir, there is only one other point to which I would like to make a reference. The Central Government are already trying to pass legislation in that regard. There are a number of young people who would like to be apprenticed in some job or other. We give any amount of help to the big industries. We give them power, we give them loan, we acquire land on their behalf, and we give them water— any quantity of water even to the determent of the people of the locality also. But in spite of all these, it is very difficult to persuade these people to take apprentices in their factories and workshops. This is under the active consideration of the Central Government now, and I understand there is to be a legislation to force these people to take a certain number of apprentices.

The other point I wish to refer to is about the Panchayat Unions. My hon. Friend Sri S. K. Sambandhan was just now mentioning that the Chairman of the Panchayat Unions were not in a position to i nspect schools. I am sorry he is mistaken. As per the Government order, the official visitors are the Chairman of the Panchayat Unions and also the members of that area.

SRI S. K. SAMBANDHAN : The hon. Member has misunderstood me. There is a Government order saying that the visits made by the Panchayat Union Chairman to elementary schools will not be official visits.

AN HON. MEMBER : For purpose of travelling allowance.

SRI M. SESHACHARIAR : As per the Government Order which I have also seen, the Chairman of the Panchayat Union is considered an official visitor for purposes of inspection. It may be that in respect of certain matters the Chairman has not got certain powers which others had in the District Board. As a matter of fact, appointments of clerks and teachers is made by the Chairman although he has no powers of punishment. This the District Board President had. That is the only difference. As regards the other matters, the powers that the Disrict Board Presidents had, I think, the Chairmen of the Unions also have.

SRI S. K. SAMBANDHAN : I meant only Commissioners, and said that the appointments were made by the Committee.

26th April 1962]

SRI M. SESHACHARIAR: It is recommended by the appointments committee. The Commissioner appoints on the authority of the Chairman. The Commissioner has no independent right to appoint unless the committee passes a resolution. It is not as if the executive head makes the appointment. He only issues the order. That is all (Interruption). I am sorry we do not seem to agree.

The other thing I would like to refer to with regard to the Panchayat Unions is this. So much of improvement has taken place. We see so many roads have come up. Many schools have come up. The only thing that is not attended to carefully is the extension work. We have extension officers for co-operation, for agriculture and for various other things. The Industries Extension Officers have done very little work. In regard to co-operation, the one point which I would like the Hon. the Minister for Co-operation to note is this. I have been emphasising it on more than one occasion. The extension officer has no control over the Bank supervisors. Supervisors are appointed by the Banks and they would not allow them to be supervised by the extension officers.

I will refer only to one other point and finish. The Governor has said in his address that we are to get an additional sum of Rs. 2½ crores according to the recent decision of the Finance Commission. No one can say that it is a boon. In respect of income-tax, though a portion of the company tax has gone away, still the Commission has recommended the grant of 66-2/3 per cent of the entire income-tax collection instead of the original grant of 60 per cent. But unfortunately, weightage is given to collection presumably due to the agitation of West Bengal and Bombay where collections are much more. Now it is to be 20 per cent while it was only 10 per cent formely. I do not know why this should be done. We have been hard hit in respect of allocation of excise duty also. We get a little less than what Andhra would get; may be on the ground of consumption. If it is to be on the basis of population, our population is a little more than that of Andhra. But still our share is a little less. As regards special grants and grands-in-aid also, our State has not got a fair deal.

Thank you, Mr. Chairman. I do not want to exceed the time limit and cause you embarrassment.

* VIDWAN T. MUTHUKANNAPPAN : மன்றத்தலைவர் அவர்களே, மதிப்புக்குரிய கவர்னர் பெருமகனாரின் உரையை மனமார ஆதரித்து வரவேற்கிறேன். இதை வரவேற்றுப் பேசுகிறபோது, ஒரு செய்தியை என்னால் சொல்லாமல் இருக்க முடியவில்லை. சில ஆண்டுகளாக ஒரு குறிப்பிட்ட கட்சியினர் கவர்னர் பெருமகனாரது உரை நிகழ்த்து விழாவுக்கு வராமல் நின்று விடுகிறார்கள். இதிலே எந்த விதமான பொருத்தம் இருக்கிறது என்று என்னால் யூகித்துப் பார்க்கவே முடியவில்லை. உண்மையிலேயே இது வருந்தத்தக்க நிலைதான். இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தை எற்றுக்கொள்ளுவதாக, மதித்து நடப்பதாக, முதல் நாள் பதவிப் பிரமாணம் செய்துவிட்டு அடுத்த நாள் அதை மதியாமல் வெளிநடப்பது எப்படிப் பொருந்தும் என்பதுதான் என்னால் யூகிக்க முடியவில்லை. இரண்டாவதாக கவர்னர் பெருமகனாரின் உரையாற்று விழாவில் கலந்து கொள்ளாமல் உரை பற்றிய விவாதம் நடக்கிற போது

[Vidwan T. Muthukannappan] [26th April 1962

அதிலே கலந்து கொள்ளுவது என்பது சரியா, முறையா, பொருத்தமா என்பதை அவர்களே சிந்தித்துப் பார்க்கட்டும் என்று விட்டு விடுகிறேன். இந்த உரையிலே கவர்னர் பெருமகனார் அரிய பல செய்திகளை எல்லாம் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

SRI A. K. THANGAVEL MUDALIAR: சுதந்திரம் இருக்கிறது அல்லவா எல்லோருக்கும். வராமல் இருக்கிறதற்குக் கூட சுதந்திரம் இருக்கிறது.

VIDWAN T. MUTHUKANNAPPAN: ஆமாம்! விடுதலை அடைந்த வெற்றித் திரு நாட்டிலே மக்களுக்கெல்லாம் பேச்சு சுதந்திரம், எண்ணச் சுதந்திரம், கருத்துச் சுதந்திரம், எல்லா சுதந்திரமும் அளிக்கப்பட்டு இருக்கிறது. அந்த நண்பர்கள் அச் சுதந்திரத்தைச் சுதந்திரமாகப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். அவ்வளவுதான்! (சிரிப்பு).

அடுத்தப்படியாக இந்த உரையிலே ஒரு முக்கிய செய்தி குறிப்பிடப் பட்டிருப்பது கண்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். அதாவது ஆழ் கடல் மீன் பிடிப்புத் திட்டங்களைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பது வரவேற்கத்தக்கது. ஜப்பானியரின் ஒத்துழைப்புடன் ஆழ்கடல் மீன் பிடிப்புப் பிரிவு ஒன்றை அமைப்பதற்கான ஒரு புதிய திட்டம் அரசாங்கத்தின் தீவிரப் பரிசிலனையில் இருந்து வருகிறது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தச் சபையில் கடந்த நான்கு ஆண்டுகளாக ஆழ் கடல் மீன் பிடிப்புத் திட்டத்தை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்று வற்புறுத்தி வந்திருக்கிறேன். நமமுடைய தமிழ் நாட்டிலே 620 மைல் நீள முள்ள கடற்கரை இருக்கிறது. 12 கோடி ஏக்கர் மீன் பிடி பகுதி இருக்கிறது. இதில் 40 லட்சம் ஏக்கர் விஸ்தீரணத்தில் தான் இப்போது பிடிக்கப்பட்டு வருகிறது. அதாவது 3 சத வீதப் பகுதியில் தான் பிடிக்கப்படுகிறது. எஞ்சிய 97 சத வீதம் பகுதியில் மீன் பிடிக்கப் படுவதில்லை. நிலத்திலே கிடைக்கக்கூடிய உணவைப் பெருத்த அளவில் திரட்டி வருகிறது அரசாங்கம். யாவரும் மெச்சக்கூடிய விதத்தில் நீரிலிருந்து கிடைக்கக்கூடிய வளத்தையும் அதிகமாகத் திரட்ட வேண்டும் என்று பல முறை கூறியதன் பயனாக ஜப்பானிய உதவியோடு ஆழ் கடல் மீன் பிடிப்புத் திட்டம் வருவது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். மேலும் அமைச்சர் திரு. மன்றாடியார் அவர்கள் மீன் இலாகாவை வகித்துவருவது குறித்து மகிழ்ச்சி கொள்கிறேன். அவர் ஏழை எளியவர்கள் பிறப்பட்டவர்கள் மீது அன்பும் இரக்கமும் கொண்டவர்.

THE HON SRI R. VENKATARAMAN: மீன் சாப்பிடுவதில்லை என்று நினைக்கிறேன்.

VIDWAN T. MUTHUKANNAPPAN: எனக்கு ஒரு அனுபவம் இருக்கிறது. மீன் உண்ணுகிறவர்களை விட உண்ணாதவர்களிடத்தில் இந்தப் பொறுப்பு இருக்கும்போது தான் சிறந்த அளவில் நல்ல காரியம் செய்கிறார்கள். எடுத்துக்காட்டாக மதிப்புக்குரிய நிதி அமைச்சரவர்கள் முன்னாள் மீன்துறை அமைச்சராக இருந்தபோது தான் உண்மையிலேயே மீன் இலாகாவைச் சிறந்த இலாகாவாக ஆக்கினார்கள். அவர் காலம் முதல் தான் அது ஒழுங்குபடுத்தப்பட்டு உருப்படியான காரியம் செய்யத் துவங்கி இருக்கிறது.

4-10 p.m. அடுத்தபடியாக, இதிலே இரயில்வே போக்கு வரத்து சம்பந்தமாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது, புதிய இரயில் பாதைகள் அமைப்பது பற்றி, இந்தப் போக்கு வரத்து வசதிகளைப்பற்றி நினைக்கும்போது, சென்னை போக்கு வரத்தைப்பற்றிச் சிந்திக்க வேண்டியிருக்கிறது. சென்னையிலே ஜன நெருக்கம் அளவு கடந்து இருக்கிறது. போக்கு வரத்து வசதிகளைச் சீர் பண்ணுவதற்கு மக்களுக்கு பலவிதத்திலும் உதவி செய்ய அரசாங்கம் முயற்சி செய்து வருகிறது. ஏராளமான பஸ்களை விடுகிறார்கள். அப்படி விட்டாலும், அதை ஈடு செய்ய முடியாமல் கொஞ்சம் சங்கடப்பட வேண்டியிருக்கிறது. அதற்கு நான் ஒரு யோசனை கூற விரும்புகிறேன் அடையாறுக்குப் பக்கத்திலுள்ள திருவான்மையூரிலிருந்து எண்ணூர் வரை மரின

26th April 1962] [Vidwan T. Muthukannappan]

ஓட்டி மின்சார இரயில் —எலக்ட்ரிக் டிரெயின்—சர்வீசை ஏற்படுத்தினால் அதனைச் சென்னை அரசாங்கம் மேற்கொண்டால், போக்கு வரத்துப் பிரச்னையைத் தீர்த்துவிடலாம் என்பது என் தாழ்மையான கருத்து. அடையாறு முதல் எண்ணூர் வரை பக்கிங்ஹாம் கால்வாயை ஆழப்படுத்தி அகலப்படுத்தி விசைப்படகுகள் விட்டால் இந்த போக்கு வரத்து நெரிசல் மேலும் தீர்ந்து மக்கள் திருப்திஅடைவார்கள். அந்த முறையிலேதான் இந்தப் பிரச்னையைத் தீர்க்க முடியும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, எனது மதிப்புக்குரிய நண்பர் திரு. சேஷாச்சாரி அவர்கள் குறிப்பிட்டார்கள். தொழில் துறையிலே இந்த நாடு—தமிழ் நாடு வெகு விரைவாக முன்னேறிக் கொண்டிருக்கிறது. முதல் இரண்டு ஐந் தாண்டு திட்டங்களிலேயும் பெருத்த முன்னேற்றத்தைக் கண்டிருக்கிறோம். இந்த உரையிலேகூட கவர்னர் பெருமகனார் குறிப்பிட்டிருக்கிறார்கள். புதிய காகிதத் தொழிற்சாலை, மேட்டூரில் அலுமினியத் தொழிற்சாலை, பெரிய கலப்பு உருக்குத் தொழிற்சாலை, ரசாயன உரத் தொழிற்சாலை, மூன்று சர்க்கரை ஆலைகள், திருச்சியில் கனரகக் கொதிகலன் தொழிற்சாலை, உதகையில் நிழற்படத் தொழிற்சாலை, கிண்டியில் அறுவை சிகிச்சைக் கருவிகள் தொழிற்சாலை, ஆவடியில் கனரக இராணுவ வண்டிகள், இராணுவ தளவாடங்கள் உற்பத்தி சாலைகள் இவைகளை எல்லாம் குறிப்பிட்டிருக்கிறார்கள். இதை எல்லாம் பார்க்கிறபோது உண்மையிலேயே தமிழ் நாடு பெருத்த அளவிலே துரிதமாக முன்னேறுகிறது. தென்னாட்டின் தொழில் துறை முன்னேற்றம் கண்டு எந்நாடும் திகைக்கிறது! வட நாடு அதிசயத்தால் வாயைப் பிளக்கிறது என்றுதான் சொல்லவேண்டும்.

இறுதியாக ஒன்றே ஒன்றைமட்டும் சொல்லிக்கொண்டு முடித்துக் கொள்கிறேன். கவர்னர் பெருமகனாரின் உரைக்குப் பல நண்பர்கள் பல திருத்தங்களைக் கொடுத்திருக்கிறார்கள். சிலர் ஒரு பெரிய பட்டியலையே கூட கொடுத்திருக்கிறார்கள். இதை நினைக்கிறபோது, கவர்னர் உரையின் தத்துவத்தை உண்மையிலேயே புரிந்துகொண்டார்களா இல்லையா என்பது எனக்குப் பெரிய சந்தேகமாக உள்ளது. கிட்டத்தட்ட இரண்டு சபைகளிலேயும் சேர்ந்து 270 அங்கத்தினர்கள் இருப்பார்கள். அவர்கள் ஒவ்வொருவருடைய உள்ளத்திலேயும் எந்தெந்தக் குறைபாடுகள், எண்ணங்கள், தேவைகள் தோன்றுகின்றனவோ அத்தனையையும் திருத்தமாகக் கொடுத்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். நேற்று என் மதிப்புக்குரிய நண்பர் திரு. எ. கே. தங்கவேல் முதலியார் அவர்கள், அவர்களுக்கே உரிய பாஷையில், உரிய பாணியில் தேர்தலைப்பற்றிப் பேசும்போது, ஆளும் கட்சியினர் சில ஊழல்களைச் செய்ததாகவும், வன்முறையில் இறங்கியதாகவும், செங்கற்பட்டு ஜில்லா காஞ்சிபுரத்தைப்பற்றிய வரையில் சொன்னார்கள். நானும் செங்கற்பட்டு ஜில்லாவாசி என்ற முறையில் ஒரு சில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

தேர்தலின்போது ஒரு சைக்கிள் ஊர்வலம் சென்றதை என் கண்ணாலேயே பார்த்தேன். நான் ஒரு கட்சிக்காரன் என்ற கண்ணோட்டத்தில் சொல்லவில்லை, பொது மனிதன் என்ற எண்ணத்துடன் சொல்கிறேன். அதில் சென்ற ஒவ்வொரு சைக்கிளிலும் மூன்று பேர்கள், முன்னே ஒருவர், நடுவில் ஒருவர், பின்னே ஒருவர் உட்கார்ந்துகொண்டு தங்கள் கட்சிக் கொடிகளைப் பிடித்துக்கொண்டு சென்றார்கள். அதற்கு இரண்டு பக்கங்களிலும் போலீஸ்காரர்களும், போலீஸ் சப்இன்ஸ்பெக்டர்களும் சென்று கொண்டிருந்தார்கள். அந்த ஊர்வலத்தில் சென்ற பலர் மிக நன்றாகக் குடித்துவிட்டு கொடுமையான கீழ்த்தரமான மொழிகளிலே பேசிக்கொண்டு தங்கள் எதிர்கட்சியினரைக் கேவலமாகத் திட்டிக்கொண்டு போனார்கள். இதையெல்லாம் அந்தப் போலீஸ்காரர்கள் அமைதியாகப் பொறுமையோடு சகித்துக்கொண்டு சென்றதைப் பார்த்த எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. தொட்டால் ஒட்டிக்கொள்வார்கள் ஒன்றை ஏன்பதாகத் திரித்துத் தங்கள் குடி மூழ்கிப் போய்விட்டதாகக் கூப்பாடு போடுவார்கள். தேர்தலை நடக்க வொட்டாமல் செய்துவிடவும் திட்டமிட்டிருந்தனர். அவர்கள் எப்படி நடந்துகொண்டாலும் பரவாயில்லை, நாம் அமைதியை மட்டும் கவனிப்போம். பொதுமக்களுடைய அமைதிக்குப்

பங்கம் இல்லாமல் இருந்தால் போதும் என்ற அளவில்தான் நமது முதன் மந்திரி அவர்கள் அவர்களுக்கு உத்திரவு போட்டிருப்பார்கள் என்று நம்புகிறேன். இந்தக் கொடுமைகளையெல்லாம் சகித்துக்கொண்ட நமது முதலமைச்சர் காமராஜர் அவர்களை கலிகால தர்மராஜர் என்றுகூட இதைப் பார்க்கும்போது நினைக்கவேண்டியிருக்கிறது இங்கே மகாபாரதக் கதை யில் ஒரு பகுதி நினைவுக்கு வருகிறது. கௌரவர்கள் கொடுமைக்குமேல் கொடுமை இழைப்பதைக் கண்ட பீமன் வெகுண்டான்.

நாட்டைவைத்துத் தோற்றான்—அண்ணன்
நாங்கள் பொறுத்திருந்தோம்
மீட்டும் எமையடிமை வைத்தான்
மேலும் பொறுத்திருந்தோம்
துருபதன் மகளைத்—திட்டத்
துயம் நன்னுடற் பிறப்பை
இருபகடை யென்றாய்—ஐயோ,
இவர்க்கடிமை யென்றாய்
இது பொறுப்பதில்லை—தம்பி
எரிதழல் கொண்டுவா
கதிரை வைத்திழந்தான்—அண்ணன்
கையை எரித்திடுவோம்.

என்று அண்ணனை வெகுண்டு பேசினான் பீமன். ஆனால் அண்ணன் தர்மர் ஒன்றும் பேசவில்லை. அப்போதும் பொறுமையாக இருந்தார். அதைப்போலத்தான் கலியுக தர்மராஜரான நமது முதலமைச்சர் காம ராஜர் இவர்கள் செய்த வன்செயல்களை காங்கிரஸ் கட்சியில் உள்ளவர்கள் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் தமக்கே உரித்தான பொறுமையுடன் இருக்கட்டும், பார்க்கலாம், என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். உண்மை அப்படியிருக்க எதிர்கட்சியினர் பிறர்மீது வேண்டுமென்றே குற்றம்சொல்வது தகாது. தாங்கள் செய்த குற்றத்தை பிறர்மேல் சாட்டிக்கொண்டிருக்காமல் அந்தப் பழக்கத்தை விட்டுவிட்டுக் கவர்னர் பெருமகனார் அவர்கள் உரையில் கூறி இருப்பதையே அதாவது "நாட்டு நிர்வாகம் நல்ல முறையில் நல்ல விதமாக நடைபெறுவதற்கு நாம் அனைவரும் பணியாற்றுகிறோம்'' என்ற வாசகத்தை மீண்டும் அவர்களுக்கு நினைவுபடுத்திக் கவர்னர் பெருமகனார் அவர்களின் உரையை வரவேற்று ஆதரித்து என் உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

SRI V. M. SURENDRA RAM: தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் ஆற்றிய உரையை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். கவர்னர் அவர்களுடைய உரையில் நம் மாநிலம் இன்று வரை எந்த நிலைமையில் முன்னேறிக்கொண்டிருக்கிறது, இனிமேல் எவ்வாறு முன்னேறப்போகிறது என்பதைபற்றி மிகவும் அழகாகவும் அருமை யாகவும் சொல்லியிருக்கிறார்கள். அதேபோல நமது மந்திரிசபையும்—புதியதும் பழையதும்—எந்த விதத்தில் வேலை செய்தார்கள், செய்கிறார்கள் என்பதைக் குறித்து மிகவும் பாராட்டியிருக்கிறார்கள். இதை யாரோ ஒரு சிலர் குற்றம் சொல்லி எதிர்த்துக்கொண்டே வருகிறார்கள். நேற்று இங்கு நமது நண்பர் திரு. எம் ஜி. ராமச்சந்திரன் அவர்கள் சொல்லியதை போல நாம் அடிக்கின்ற வேகத்தில்தான் எறிகின்ற பந்து திரும்பும் என்பதையொட்டி அவர்கள் வீசிய வேகத்தை நாமும் காட்டவேண்டிய நிலைமையில் இருக்கிறோம். கடந்த பல ஆண்டுகளாக காங்கிரஸ் சர்க்கார் எந்த விதமாக நடந்திருக்கிறது என்பதை உதாரணத்திற்குச் சொல்கிறேன். 1952-ல் இந்த நாட்டுக் கலைஞர்களைப் பாராட்டும் விதத்தில் ராஜ்ய சபைக்கு இந்திய அரசாங்கம் பிருதிவிராஜ்கபூரை உறுப்பினராக நியமித்தது. அதைப் போன்று நமது சபையில் மதிப்பிற்குரிய திருமதி கே. பி. சுந்தராம்பாள் அவர்களை கவர்னர் நியமனம் செய்தார். காங்கிரஸ் ஸ்தாப னமும் சர்க்காரும் கலைஞர்களுக்கு ஒன்றும் செய்யவில்லை என்றும் குறிப்பாக திராவிட முன்னேற்றக் கழகத்திற்குத்தான் அக்கறை உண்டு என்றும் சொல்கிறவர்களுக்கு அந்த அக்கறையைவிட சர்க்காருக்கு அதிக மாக உண்டு என்பதைத்தான் இது எடுத்துக்காட்டுகிறது. இப்போது நண்பர்

26th April 1962] [Sri V. M. Surendra Ram]

திரு. கே. ஆர். ராமசாமி அவர்கள் சொன்னார்கள். திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் திரு. அண்ணாத்துரை அவர்கள்தான் கலைஞர்களுக்கு மிகவும் உதவி செய்கிறார்கள், கௌரவிக்கிறார்கள், பாராட்டுகிறார்கள் என்று அவர்கள் இதைப்பற்றி நினைப்பதற்கு முன்பே எல்லாவற்றையும் சர்க்கார் செய்திருக்கிறது. கலை கட்சிக்கு அப்பாற்பட்டது. அதற்காக வேண்டித்தான் நியமனம் மூலம் வரவேண்டுமென்று நினைத்து நம் சர்க்கார் கலைஞர்களை நியமித்தது. கட்சி மனப்பான்மை கொண்டு அவர்கள் கவுன்சிலிலே, அசெம்பிளியிலே வந்திருக்கிற காரணத்தினால் கட்சியை விளம்பரப்படுத்த இதுபோன்ற வார்த்தைகளைச் சொல்லிவருகிறார்கள். கலைஞர்களையும் பெரியவர்களையும் நமது மாகாணம் எந்த விதத்தில் முன்னேற்றி வருகிறது என்பதைத் தெரிந்துகொள்ளாமல் கட்சியை ஆதரிக்கவேண்டுமென்ற எண்ணத்தால் அவர்கள் பேசுகிறார்கள். 4-20 p.m.

அடுத்தபடியாக, நீலகிரி ஜில்லாவைப் பொறுத்தவரையில், அது பிற்போக்கான ஜில்லா. மலைப்பிரதேசம். அங்குகூட கிராமங்களுக்கெல்லாம் ரோடு போட்டிருக்கிறார்கள். மலைவாசிகள் முன்பு மலைக்காடுகளில் வசித்தார்கள். அங்கெல்லாம் சர்க்கார் வீடு கட்டிக் கொடுத்துக் கொண்டு வருகிறார்கள். குடிதண்ணீர் வசதி அளித்திருக்கிறார்கள். பள்ளிக்கூடம் திறந்திருக்கிறார்கள். இவற்றையெல்லாம் இவர்கள் பார்க்க வேண்டுமென்றுதான் சர்க்கார் சட்டசபையை ஒருமுறை அங்கே வைத்திருந்தார்கள். அப்போதுகூட குறிப்பாக திராவிட முன்னேற்றக் கழகத்தினர் எப்போதும் குற்றம் சொல்லிக்கொண்டிருக்கிறவர்கள் அதற்கு வரவில்லை. அதேபோல் இந்த வருடமும் தேர்தல் தீர்ந்துவிட்டது. 1963-ல் வரப்போகும் பட்ஜெட் செஷனை உதகையில் நடத்தினால் . . .

**Sri A. K. THANGAVEL MUDALIAR**: அதனால் பணம் அதிகமாகச் செலவாகிறது என்று சொன்னோம்.

**Sri V. M. SURENDRA RAM**: இங்கு மட்டும் அந்த பணம் செலவாகவில்லையா ? இங்கும் யாரும் சும்மா வந்துபோகவில்லை. ஒரு நாளைக்கு ரு. 12·50 படிவாங்கிக் கொண்டுதான் போகிறோம். இங்கு சட்டசபை நடந்தாலும் அங்கு நடந்தாலும் படி வாங்கத்தான்போகிறோம். கனம் அங்கத்தினர் திரு. தங்கவேல் முதலியார் அவர்கள்கூட உதகை (ஊட்டி) வந்திருக்கிறார்கள். அவர்கள் மிகப் பழைய அரசியல்வாதி. நாங்கள் எல்லாம் பிறப்பதற்கு முன்பே 1919 லேயே அரசியலில் ஈடுபட்டவர்கள். அப்படிப்பட்டவர்கள் இப்படி எதிர்க்கிறார்களே என்பதுதான் அதிசயமாக இருக்கிறது. சுதந்திரம் வந்த பிறகு நமது சர்க்கார் எந்தச் சூழ்நிலையில் இருந்தது ? குந்தா திட்டம் அப்போதில்லை. குந்தா ஒரு பெரிய ஆறு. ஸ்ரீமான் அன்பழகன் அவர்கள் சட்டசபை நிகழ்ச்சிக்காக அங்கு வரவில்லையென்றாலும் வேறு விஷயங்களுக்கு அங்கு வந்திருக்கும்போது, குந்தா ஆற்றைப் பார்த்திருப்பார்கள். அந்தத் தண்ணீர்வீணாகப் போய்க்கொண்டிருந்தது. அதில் ஒரு சொட்டுத் தண்ணீர்கூட வீணாகாத முறையில் திட்டம் வகுத்து அது பயன் அளிக்கும் முறையில் செய்திருக்கிற இந்த சர்க்காரைப் பாராட்டுவதா, வேண்டாமா, என்று அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். குற்றம் சொல்வது என்று ஆரம்பித்தால், அதற்கு முடிவில்லை. அது போய்க்கொண்டேதான் இருக்கும். ஆகையால், அடுத்து நடக்கப்போகும் சட்டசபைக்கூட்டத்தை உதகையில் வைத்து நடத்தவேண்டுமென்று தலைவர் அவர்கள் மூலமாக நீலகிரி மக்கள் சார்பாக அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தப்படியாக எனக்கு முன்பு பேசிய அப்துல் வகாப் சாகிப் அவர்கள் சொன்னார்கள், பிள்ளைகள் படித்தால்மட்டும் போதாது, மதிய உணவு கொடுத்தால் மட்டும்போதாது, படித்துவிட்ட பிறகு அவர்கள் போக்கிரிகளாக, பிக்பாக்கெட்டுகளாக ஆகிவிடுகிறார்கள் என்று சொன்னார்கள். அது மிகவும் வருந்தவேண்டிய விஷயம். அரிஜனங்களைப் பொறுத்தமட்டில், சுதந்திரம் வந்த பிறகு, எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள் என்று பார்க்கவேண்டும். ஹாஸ்டல் வசதி, ஸ்காலர்ஷிப் வசதி கொடுத்ததால்தான், மிகவும் மோசமான சூழ்நிலையில்

இருந்த சமுதாயமெல்லாம் முன்னுக்குவந்திருக்கிறது என்பதைத் தெரிந்துக்கொள்ளவேண்டும். சர்க்காரைக் குறைகூறவேண்டுமென்றே சொன்னால் . . . .

Sri K. S. ABDUL WAHAB : எங்கள் அபிப்ராயத்தைத்தான் சொன்னோம்.

Sri V. M. SURENDRA RAM : சர்க்கார் எல்லாவற்றையும் ஒவ்வொன்றாகத்தான் செய்து கொண்டுவருகிறது. அவர்கள் சொன்ன அபிப்ராயம் இப்போதே நடைமுறையில் இருந்துவருகிறது. தங்குவதற்கு ஹாஸ்டல், பெண்களுக்குப் படிப்பு, உடை, உணவு எல்லாம் அளிக்கிறார்கள். இதற்குமேல் என்ன செய்ய முடியும் ? ஒரே நாளில் சர்க்காரால் எல்லோருக்கும் சலுகை காட்ட முடியாது. 1947-ல் வெள்ளைக்காரன் நாட்டை விட்டுப் போகும்போது நம்மை அன்றாடம் காய்ச்சியாகத்தான் விட்டுவிட்டுப் போனான். ஆகையால் இதற்கெல்லாம் பொறுமை வேண்டும். நடந்த நல்ல விஷயங்களை மக்களுக்குத் தெரிவிக்காமல் உணவு விலை ஏறிக் கொண்டே வருகிறது, அதைக் கட்டுப்படுத்தவேண்டுமென்று சொல்கிறார்களே தவிர, எப்படிக் கட்டுப்படுத்துவது என்பதைப் பற்றி இந்த சபையிலும் கீழ் சபையிலும் யாராவது சொல்லியிருக்கிறார்களா ? இந்த நாட்டின் சுபிட்சத்தைப்பற்றி ஏதோ ஒரு சில கட்சிகளுக்குத்தான் அக்கறை இருப்பதாகக் கூறுகிறார்கள். அவர்களையெல்லாம்விட பல மடங்கு அககறையோடு எங்கள் தலைவர் முதன்மந்திரி காமராஜர் அவர்கள் தீவிரமாக உழைத்து வருகிறார்கள் என்பதைப் பகிரங்கமாகத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். நாம் சட்ட சபையில் பேசுகிறோம். ஆனால் ஒவ்வொரு நிமிஷமும் இதையே நினைத்துக்கொண்டு அதற்குப் பரிகாரங்களைச் செய்து வருகிறார்கள் எங்கள் தலைவர் என்பதை அவர் வாழ்க்கையில், தொண்டில் பார்த்தால் விளங்கும். காங்கிரஸ் சர்க்காரைகுறைகூறுவது ஒன்றுதான் திட்டம் என்று வைத்துக்கொண்டு மக்களைவெகுநாளைக்கு ஏமாற்றிக்கொண்டிருக்கமுடியாது. ஓரளவுதான் ஏமாற்ற முடியும். தேர்தல் நேரங்களில் அவர்கள் திட்டம் வருகிறது. பின்னால் தானாகவே மறைந்துவிடுகிறது. கடந்த தேர்தலில் அவர்கள் வந்த தொகுதிகளில் உள்ள மக்கள் இதைப் புரிந்து கொண்டதால்தான் இந்த முறை தொகுதி மாறியவர்கள் மட்டும் வரமுடிந்தது. இந்த முறை வந்தவர்கள் அதே இடத்தில் அடுத்த தேர்தலில் வரமுடியாது. ஏனென்றால் மக்கள் அவர்களைப் புரிந்து கொள்வார்கள்.

அடுத்தபடியாக, எங்கள் ஜில்லாவில் " லேட் பிளைட் " என்ற நோயால் உருளைக் கிழங்குகள் அதிகமாகப் பாதிக்கப்பட்டிருந்தன. அதனால் விவசாயம் அதிகம் பாதிக்கப்பட்டது. இந்த உருளைக்கிழங்கு எங்கள் ஜில்லாவுக்கு " பேக்போன் " முதுகெலும்பு மாதிரி இருக்கிறது. அது இல்லாவிட்டால் நாங்கள் வாழமுடியாது. அந்தக் கிழங்குகளுக்கு வேண்டிய விதைகள், தேறிய விதைகள் இப்போது கிடைப்பதில்லை. இந்தியாவில் அந்த விதைகள் இல்லாமல் ஸ்காட்லாந்திலிருந்து வரவேண்டியிருக்கிறது. சர்க்காரால் அதை முழுவதும் சப்ளை செய்யமுடியாமல் இருக்கிறது. பல ஆயிரக்கணக்கான நிலங்களில் விவசாயம் செய்ய வேண்டியிருப்பதால், நமது சர்க்கார் விதைகள் கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். நீலகிரி நல்ல நிலைமையில் விளங்குவதற்கு அதுதான் ஜீவநாடி. ஆகையால் அது கெட்டுப்போக விடாமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். Soil conservation இப்படியே போய்க்கொண்டிருத்தல் கூடாது. மைசூர் ராஜாகூட நிலம் வைத்துக் கொண்டிருக்கிறார் என்று சொல்லுகிறார்கள். அவர் நிலத்தின்மீதுகூட எங்கள் கலெக்டர் நடவடிக்கை எடுத்து விட்டார். இப்பொழுது சில இடங்களில் வேலை செய்ய வில்லை. சர்க்கார் இன்று செய்கின்ற வேலை அவர்கள் போடுகிற சட்டம் எல்லாம் நல்லபடி தான் இருக்கிறது. மண் அரிதடுப்பு வேலைக்காக பல ஊர்களிலே பல கோடி ரூபாய செலவு செய்கிறார்கள். நீலகிரி ஜில்லாவிலே குந்தா பிராஜக்ட் எல்லாம் இருக்கிறது. கோடிக்கணக்கான ரூபாய் close ஆகிவிடும். சர்க்கார் செய்கின்றதைத் துரிதமாகச் செய்து, நம் மாநிலத்தில் எல்லா நிலமும் soil conservation method-ல் வருவதற்கு ஏற்

26th April 1962] [Sri V. M. Surendra Ram]

பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டு இந்த சந்தர்ப்பத்தில் பேச வாய்ப்பு அளித்த மன்றத் தலைவருக்கு நன்றி தெரிவித்து முடித்துக் கொள்ளுகிறேன்.

*Sri K. ANBAZHAGAN : மதிப்புக்குரிய சட்ட மன்றத் தலைவர் அவர்களே, சட்ட மன்ற மேல் அவையில் நான் பேசுவதற்கு இந்த வாய்ப்பைப் பெற்றதற்கு நான் மகிழ்ச்சி அடைகிறேன். பொதுத் தேர்தலில் கிடைத்த தோல்வியால்தான் இந்தச் சட்ட மன்றத்தில் இடம் பெறும் வாய்ப்பு கிடைத்தது என்று கருதி, அடைந்த தோல்விக்காகவும் நான் மகிழ்ச்சி அடைகிறேன். அதுமட்டும் அல்லாமல், இந்த அவையில் கல்வித்துறையில் மேதை என விளங்குகிற எதிர்க் கட்சித் தலைவர் அவர்கள் வீற்றிருக்கிறார்கள். அடுத்து என்னுடைய பேராசிரியர் டாக்டர் சிதம்பரநாதன் அவர்கள் இந்த அவையில் இடம் பெற்றிருக்கிறார்கள். மேலும் பொறுப் புணர்ச்சியோடு பணியாற்றுகிற அமைச்சர் என்று நான் மதிப்புடன் கருதுகிற கனம் திரு. வெங்கட்டராமன் அவர்கள் இந்த அவைத் தலைவராக இருக்கிறார்கள். எனவே இந்த அவையில் இடம் பெற்றதைப்பற்றி எண்ணி நான் பெருமைப்படுகிறேன்.

உண்மையாகவே, கவர்னர் அவர்களின் உரையை வரவேற்கவேண்டும் என்று நான் முயற்சித்தாலும் முடியாமல் போய் விட்டதற்கு வருந்துகிறேன். கவர்னர் அவர்களின் உரையின் மூலமாக ஏதாவது புதிய வளர்ச்சி அடைவதற்கு வழியும் வாய்ப்பும் அந்த உரையில் காணப்படுகிறதா என்று நான் துருவிப் பார்த்தேன். இந்த ஆண்டு மட்டுமே முதன்முதலாக கவர்னர் உரையைப் பார்த்தறிகிற நிலையில் நான் இல்லை. இதற்கு முன்னரும் சில தடவைகள் படித்துப் பார்த்த அந்தத் தொடர்பில் எண்ணிப் பார்த்துதான் இதை தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இதற்கு முன்னர் நிகழ்ந்த உரைகளிலேயாவது, ஏதாவது சில நெருக்கடி நிலைமைகளைப்பற்றி அவ்வப்போது ஆராயவேண்டிய பிரச்னைகளைப்பற்றி, கவர்னர் அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். ஆனால் இப்பொழுது நிகழ்த்திய உரையில், நான் படித்துப் பார்த்த அளவில் மிகவும் முக்கியமான விலைவாசி ஏற்றத்தைப்பற்றிக்கூட ஒரு சிறு கண்டனமும் அவர்கள் தெரிவிக்கவில்லை. அதைத் தடுப்பதற்கு முயற்சி மேற்கொள்ளப்படுமா என்பதும் எடுத்துக் கூறப்படவில்லை. அதற்கு என்ன செய்யலாம் என்பதைப்பற்றி அமைச்சர்கள் என்ன எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் என்றுகூட தெரிவிக்கவில்லை. ஆனால் உண்மையாகவே கவர்னர் அவர்களுக்கு இந்த விலைவாசி ஏற்றம் தெரியாதா? இந்த ஆண்டு இதைப்பற்றித் தெரிவிக்கவில்லையே தவிர, 1960-ம் ஆண்டு ஆகஸ்டு திங்களில் நிகழ்த்திய உரையில் மிகத் தெளிவாகத் தெரிவித்தார்கள். "அகவிலைகள் இடைவிடாமல் ஏறிக்கொண்டு போவதுதான் நமது நாட்டின் இன்றையப் பொருளாதாரத் துறையில் வருந்தத்தக்க ஒரு அம்சமாகும்" என்று அன்று தெரிவித்திருக்கிறார்கள். இடைவிடாமல் ஏறிக்கொண்டே போவது என்று அந்த உரையில் சுட்டிக் காட்டப்பட்டு இருக்கிறதே தவிர, தடுத்து நிறுத்தப்படுமா, கட்டுப்படுத்தப்படுமா என்பதுபற்றி ஏதும் குறிப்பிடப்படவில்லை என்றும் கருதிவிட வேண்டாம். கவர்னர் அவர்கள் சில கருத்தையும் தெரிவித்திருக்கிறார்கள். அவர் தெரிவித்தது இது "இந்த விலைவாசி ஏறுகிற காரணத்தால், மக்களுக்கு அதிக கஷ்டங்கள் ஏற்படுகின்றன. அதிலும் முக்கியமாகக் குறைந்த வருமானம் உள்ள மக்களுக்கு இதனால் பெருங்கஷ்டம் ஏற்படுகிறது. இந்தப் போக்கினை நாம் கட்டுப் படுத்தாவிடில், திட்டத்திற்கு எதிர்பார்க்கப்படும் நிதி வசதிகள் எல்லாம் கிடைக்காமற் போய்விடலாம். ஏனென்றால், பணவீக்கம் ஏற்படுவதால் பணத்தை சேமிக்கும் வாய்ப்பும் வசதியும் குறைந்து போகின்றன. அகவிலைகளைக் கட்டுப்படுத்துகிற அம்சங்களில், முதலீடு செய்யும் விகிதம், தொழில் கொள்கை, இறக்குமதிக் கட்டுப்பாடுகள், கலால் தீர்வைகள், கடன் நிபந்தனைகள் பற்றுக்குறை நாணயச் செலவாணி போன்ற அம்சங்களில் பெரும்பாலானவற்றை மத்திய அரசாங்கத்தார் திட்டக்கமிஷனுடன் கலந்தாலோசித்து முறைப்படுத்துகின்றனர். இது பற்றிய தமது கருத்துக்களை இந்த அரசாங்கம் தேசிய வளர்ச்சிக்கு கவுன்ஸிலிடம் கூறியுள்ளது", என்று தெரிவித்திருக்கிறார். இந்த பிரச்னை குறித்து தீவிரமாய் ஆலோசித்து நல்லதொரு முடிவுக்கு 4-30 p.m.

வருவார்கள் என்று தாம் நம்புவதாகவும் தெரிவித்திருக்கிறார்கள். அந்த நம்பிக்கை இப்பொழுது என்னவாயிற்று? கவர்னரைக் கேட்க விரும்பவில்லை. அவருக்கு ஆலோசனை கூறுகிற அமைச்சர்களைத்தான் கேட்க விரும்புகிறேன். திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள், தங்கள் பேராசை காரணமாக ரூபாய்க்கு மூன்று படி அரிசி தருவதாக பொது மக்களிடம் கூறியது அமைச்சர்கள் கருத்துப்படி குற்ற மாக இருக்கலாம். அது குற்றம் என்றால், ரூபாய்க்கு மூன்று படி அரிசி கொடுக்க முடியாது, நாங்கள் இரண்டு படி தருகிறோம் என்றாவது அமைச்சர்கள் திட்டவட்டமாகச் சொல்லி இருக்கவேண்டும். அரிசி விலையை குறைக்க முடியவில்லை என்றாலும், கேழ்வரகு, துவரம் பருப்பு, ஆகியவற்றை விலை குறைத்துத் தருவோம் என்றாவது சொல்லிச் செய்து காட்டியிருக்கவேண்டும். அதைச் செய்ய முடியாவிட்டாலும், ஏறாமல் பார்த்துக்கொள்ளுகிறோம் என்றாவது சொல்லியிருக்கவேண்டும். விலை ஏறுகிறபோது தடுத்து இருக்கவேண்டும். ஏறிவிட்ட பிறகு, குறைப்ப தற்கு வழி இல்லை என்ற நிலைமையில் இப்பொழுது இருக்கிறது. எந்தப் பண்டமாக இருந்தாலும், விலை ஏறுகிறபோது தடுக்க வழி இல்லை. ஆனால் திட்டங்களுக்குப் பணம் தேவை என்ற காரணத்தால், புது வரி போடத் திட்டமிடும் மாநில அரசு எதிர்க் கட்சிகளை எண்ணிப்பார்த்துக் கொஞ்சம் தயங்குகிறது. இருந்தாலும் துணிந்து வரி விதிக்க எண்ணிக் கொண்டுள்ளனர். மத்திய அரசாங்கத்தார் எந்தக் கவலையும் இல்லாமல் நினைத்தபடி வரி போடுகிறார்கள். வரியின் அளவு எவ்வளவு என்பதை டீ குடிக்கின்றவர்கள் எவ்வளவு விலை ஏறி இருக்கிறது என்பதை எண்ணிப்பார்த் தாலே போதும்.

விலைவாசி ஏற்றத்தைத் தடுப்பதற்கு ஒரு அரசாங்கத்தால் முடியவில்லையே என்று கூறும்போது எங்கள் அரசாங்கம் நிர்வாகப்பயிர்ச்சியில் மிக்க அதிகாரிகளைப் பெற்ற அரசாங்கம், திறமை மிக்கவர்களைக்கொண்ட அரசாங் கம் என்று சொன்னால், என்ன பொருள் இருக்கமுடியும்? நிர்வாகத்திறமை என்பது செய்யவேண்டிய கடமையை முறைப்படி செய்வது என்பது மட்டுமல்ல. எதை எதை எவ்வெப்போழுது எப்படிச் செய்ய வேண்டும் என்று சிந்தித்து முடிவு எடுத்து, நிறைவேற்றவேண்டும். இன்றைய தினம் நிர்வாகம் என்பது ஜனநாயக நெறிக்கு ஏற்றதாக மக்களுடைய தேவையை நிறைவேற்றவேண்டிய பொறுப்போடு நடைபெற வேண்டும். மக்கள் ஆட்சி ஏற்பட்டிருக்கிற காலத்தில், பொதுமக்களுக்கு உதவக் காலத்தில் கடமையாற்றுவதுதான் சிறந்த நிர்வாகமாகும். விலைவாசி ஏறுவது குறித்து ஆலோசிக்கிற நிலைமையில் 3 மாதம், பின்னால் அதிகாரிகள் பரிசீலனைக்கு 6 மாதம், அதற்குப் பின்னால் தாசில்தார் கிராமத்திற்கு வந்துபோய்ச் செயலாற்றுவது 8 மாதம், என்ற நிலை இருந்தால் என்ன பலன் ஏற்படும் என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும். நேர்மைத்தரம் உள்ள அதிகாரிகள் இருக்கிறார்கள், அவர்களை வரவேற்கிறேன். ஆனால் அவர்கள் நிர்வாக இயந்திரத்தை சுறுசுறுப்பான முறையில் இயக்கி அதன் மூலம் மக்கள் தேவையை நிறைவேற்றவேண்டும்.

அடுத்து விலைவாசியைக் கட்டுப்படுத்துவது என்றால், உணவுப் பொருள் உற்பத்தி செய்வதில் அதிக கவனம் செலுத்த வேண்டும். ஏற்கனவே இருந்ததைவிட அதிக உற்பத்தி இருந்தும் விலைவாசி ஏறு கிறதே, அதன் காரணம் என்ன என்றும் எண்ணிப் பார்க்கவேண்டும். அதற்குப் பதில் வேண்டுமானால் சொல்லுவார்கள் **(inflation)** பண வீக்கம் ஏற்பட்டுவிட்டது என்று. அப்படி **inflation** ஏற்பட்டுவிட்டது என்றால் அதைக் கட்டுப்படுத்த அரசாங்கத்தால் முடியாதா? அதற்கு ஒருவேளை பாங்குகள் காரணமாக இருந்தால் அவைகளை தேசிய மயமாக்குங்கள். மிகப்பெரிய முதலாளிகளிடம் பணம் குவிவது காரண மாக இருந்தால், அவற்றைத் திருப்பிப் பெற வழிகாணுங்கள். பண்டங் களை விற்பதில் கொள்ளையடிக்கிறார்கள் என்றால், அதில் கொள்ளைலாபத் தைத் தடுத்து நிறுத்துங்கள். பஸ்களை ஓட்டுவதில் கோடிக்கணக்கில் சேர்க் கிறார்கள் என்றால், அவற்றை தேசியமயமாக்க முன்வாருங்கள். ஆலைகள்தான் காரணம், அதிலே ஏராளமான பணம் சேர்கிறது, கைத்தறி நெசவாளர்கள் கண்ணீர் விடுவதற்குக்கூட காரணமாகும் அளவுக்கு அங்கு லாபம் குவிகிறது என்றால், அவைகளைத் தேசியமயமாக்குங்கள்.

26th April 1962] [Sri K. Anbazhagan]

"சினிமாக்கொட்டகையில் டிக்கட் விலை—கட்டணம் அதிகம் வைத்து விட்டார்கள், எங்கள் தோழர்கள் எப்படிப் போவார்கள். கட்டணத்தைக் குறைக்க வேண்டும்" என்று ஆளுங்கட்சியினர் இங்கே கேட்கிறார்கள். ஆனால் நாங்கள், அதைத் தேசியமயமாக்கி சினிமாக்கொட்டகைகளை அரசாங்கமே நடத்தட்டும் என்கிறோம். அப்படி அரசாங்கமே நடத்தினால், வாரத்துக்கு 3,000, 4,000 ரூபாய் என்று ஒவ்வொரு கொட்டகைக்கும் வருகிற லாபம் அரசாங்கத்தின் நிதிக்குவியலோடு சேரும். அந்தப் பணத்தைக் கொண்டு எத்தனையோத் திட்டங்களை நிறைவேற்றலாம். உடனடியாக தேசியமயமாக்குங்கள். எங்கள் லட்சியம் சோஷலிசம் என்று ஊருக்குச் சொல்லிவிட்டு பொதுமேடையில் பேசிவிட்டு, "சோஷலிசம்" என்று சொல்லுவதெல்லாம் தேர்தலை கவனத்தில் வைத்துக்கொண்டுதான் சொல்லுகிறோம், மற்றபடி அவர்களிடம் சேருகிற இலாபப் பணத்தில் எங்களுக்கு பங்கு வந்தாக வேண்டும், அதைக் கைவிடமாட்டோம் என்று ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் சொல்லுவார்களானால் அவர்கள் பேசும் சோஷலிசம் கட்சிக்காகப் பேசப்படுவதே தவிர, காரியத்துக்காக அல்ல என்று குற்றஞ் சாட்ட விரும்புகிறேன். பஸ்களை தேசியமயமாக்குவது பற்றி அமைச்சர் அவர்கள் வேறொரு இடத்தில் பதிலளித்திருக்கிறார்கள். அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். பஸ் முதலாளிகள் எல்லாம் எங்கள் கட்சி நன்மைக்காகத்தான் இருக்கிறார்கள் என்று எதிர்கட்சியினர் சொல்லுவார்களானால், அப்படி எங்கள் நன்மைக்காக இருக்கிறவர்களை எப்படி விலக்கிவிட முடியும்? எப்படி அசராங்கம் கொள்ள முடியும்? என்றுகேட்கிறார்கள். அவர்கள் நன்மைக்காகவே பஸ் முதலாளிகள் "அவர்கள் நன்மைக்காகவே ஆலை முதலாளிகள் அவர்கள் நன்மைக்காக மிகப்பெரிய நிலச் சுவான்தார்கள், அவர்கள் நன்மைக்காக உச்சவரம்புச் சட்டம் கட்டுப்படுத்தினாலும் தப்பித்துக்கொண்டு போகக்கூடியவர்கள் ஏராளம், ஏராளம்! இப்படிப்பட்ட நினைப்பில் உள்ளவர்களை கட்சியில் வைத்துக்கொண்டுதான் சோஷலிசத்தை நிறைவேற்றுகிறோம் நாம். 4-30 p.m.

ஆனால் தி.மு. கழகத்தார், அது போன்ற எதிர்கட்சியினர், வீணை குறை கூறுகிறார்கள் என்று குற்றம் சாட்டுவார்களானால், கண்டிப்பார்களானால் மற்றதைச் செய்யாவிடினும் இதையாவது அருள்கூர்ந்து செய்யுங்கள் என்றுதான் கேட்டுக்கொள்வேன். எதைச் செய்தாலும் செய்யாவிட்டாலும், அகவிலை ஒன்றையாவது இறக்கிக்காட்டுங்கள், நாங்கள் வணக்கம் செலுத்துகிறோம். எந்தக் காரணத்தை முன்னிட்டாவது, எந்த முறையைக் கையாண்டாவது ஏழைக்குச் சோறு கிடைப்பதற்கு, பிச்சைக்காரர்கள் இல்லாமல் போவதற்கு, எல்லோருக்கும் குந்தக் குடிசை கிடைப்பதற்கு—இதற்காவது வழிசெய்யுங்கள். முதலில் விலைவாசியைக் குறைத்து மக்கள் துன்பத்தைப் போக்குங்கள். அப்படிப்பட்ட நிலையில் ஆளும் கட்சி விலைவாசிக் கட்டுப்பாட்டை மேற்கொண்டு இருந்தால், ஒரு அளவு சோஷலிசத்தை மனதில் வைத்துக்கொண்டுதான் செயலாற்றுகிறார்கள் என்றாவது எண்ணிக் கொள்ள முடியும். அப்படிப்பட்ட முறையில் இல்லாமல் இன்றும் விலைவாசி ஏறுகிறது. விலைவாசி ஏறவில்லை என்று அமைச்சரவர்கள் ஏதாவது புள்ளி விவரம் காட்ட முடியுமா? அந்த விலைவாசியைக் கட்டுப்படுத்த 1960-ம் ஆண்டிலிருந்து 1962 வரை இன்னின்ன காரியம் செய்தோம் என்று எடுத்துச் சொல்ல முடியுமா? மாறாக ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்கள் பேசும்போது எதிர்கட்சியினர்மீது நீங்கள் பொதுமக்களுக்கு ஆசைகாட்டி ஓட்டுவாங்கப் பார்க்கிறீர்கள் என்று கண்டிப்பது எந்த வகையிலே நியாயம் என்று எனக்குத் தெரியவில்லை. ஒருவேளை ரூபாய்க்கு 3 படி அரிசி என்று தி.மு. கழகத்தினர் சொல்லி அதனால் ஓட்டு பெற்றிருப்போமேயானால் அப்படிப் பெற்ற ஓட்டுகளுக்காக ஆசை காட்டிய குற்றத்துக்கு ஆளாவதை மனதார ஏற்றுக் கொள்கிறேன், ஆனால் அந்த ஆசை நிறைவேற்றப்படுமா இல்லையா என்பதை ஆட்சிப் பொறுப்பை ஏற்றால் தவிர யாரும் முடிவுகட்ட முடியாது. எங்களிடம் ஆட்சிப் பொறுப்பு இருந்து இந்தக் கடமையை நிறைவேற்ற முடியாமல் போய்விட்டால் மூன்று மாத காலத்தில் எங்களை விரட்டியடித்துவிட்டு அப்போது மாற்றுக்கட்சியாக இருப்பவர்கள் ஆட்சிக்கு வருவதை வரவேற்போம். ஆனால் ஒரு கட்சி ஆட்சிப் பொறுப்பிற்கு வராத நிலையில் 3 படி அரிசி தருவோம் என்று சொல்லி, ஏமாற்றினார்களே என்றால், இதுவே எனது பதில். நாங்களாவது வெறும் வார்த்தையைச்சொல்லி ஆசை வார்த்தையால் ஏமாற்றியதாகக் கூறுகிறீர்கள்.

[Sri K. Anbazhagan] [26th April 1962

ஆனால் பச்சைப் பசேலென்று ரூபாய் நோட்டுக்களைக் கத்தையாக நீட்டிக் கொண்டு ஆசைக்காட்டியவர்களை இந்தநாட்டு மக்கள் புரிந்துகொள்ள மாட்டார்களா ? போலீஸ் பாதுகாப்பை வைத்துக்கொண்டு வீட்டுக்கு வீடு ணம் கொடுத்து ஓட்டுக் கேட்டதை மக்கள் அறிய மாட்டார்களா ? அதைக் கண்டிப்பதற்கும் தடுப்பதற்கும் யாராவது செல்வார்களானால் எஸ்.ஏ.பி. போலீசாரை வைத்துத்தடுத்து விரட்டியவர்களைப்பற்றி நாட்டு மக்கள் எண்ணிப்பார்க்கமாட்டார்களா ? அவர்களுக்குக் கொதிப்பு ஏற்படாதா ? கலெக்டரை தமக்கு ஒத்துழைப்பு தரவில்லை என்று விரட்டிய மந்திரிகள் இல்லையா ? அதிகாரிகளை தங்கள் பக்கம் இழுத்துக் கொண்டவர்கள் அமைச்சர்களிலே கிடையாதா? வாக்குஅளிக்கிற பொதுமக்களை கடைசி நேரத்திலேகூடத் தம் பக்கம் திருப்பும் முறையில் சில அதிகாரிகள் நடந்து கொள்ளவில்லை என்று மனப்பூர்வமாகச் சொல்ல முடியுமா ? நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அமைச்சர் திரு சுப்ரமணியம் அவர்கள் அமைத்த அரசியல் கட்சிகளுக்கான விதிமுறைக்குழுவில் நான் இடம் பெற்றிருந்தேன். அந்தக் குழுவினர் சந்தித்துப் பேசுகிறநேரத்தில் உண்மையாகவே எந்த அளவுக்கு ஒழுங்கை பின்பற்ற முடியுமோ அந்த அளவுக்குப் பின்பற்ற வேண்டும் என்று விரும்பினோம். அதே குழுவில் ஒழுங்குக்கு மாறான நிலையில் சிலர் நடந்து கொண்ட தன்மையை எடுத்துச் சொல்லி இருக்கிறேன். போலீசார் ஓட்டுக்களை உண்மையாகவே கட்டாயப்படுத்தி வாங்குகிற சூழ்நிலை தமிழ் நாட்டில் பல இடங்களில் இருந்தது என்பதையார் மறுக்க முடியும் ? இது குறித்து நான் போலீஸ் இலாகா தலைவரிடமே குற்றம் சாட்டி இருக்கிறேன். அது அம்பலத்திற்கு வராமல்போகுமா ? நான்கு பேர் அந்த இலாகாவை விட்டு வெளியே வந்த பின்னராவது சொல்லாமலா போய் விடுவார்கள் ? அந்தத் துணிவு வராமலா போய் விடும் ? உயிருக்கு அஞ்சி எவ்வளவு காலம் வேண்டுமானாலும் அடிமையாகவே வாழ்வார்களா ? உறுப்பினர் ஒருவர் இங்கு சொல்லியிருக்கிறார் தி.மு.க. வினர் சுதந்திரத்தை சுதந்திரமாகவே பயன்படுத்துகிறார்கள் என்று. சுதந்திரத்தை சுதந்திரமாகப் பயன்படுத்தாமல் அடிமையாகவா பயன்படுத்தவேண்டும். அடிமை உணர்ச்சி அன்று ஒரு நாள் ஏற்பட்டது இன்னுமா விலகாமல் இருக்க வேண்டும் ? எவருக்கு, என் அடிமை செய்வது என்ற உணர்ச்சி ஏற்படாமலா போகும் ? ஆட்சிப் பொறுப்பில் இருக்கிற அமைச்சர்கள் கூடத் "தோழர்கள்" ஆவதுதானே முறை, அவர்கள் எஜமானர்கள் என்ற ஒரு எண்ணமே ஜனநாயகத்தில் ஏற்படலாமா ?

இன்னும் ஒன்றுகூட வேதனையோடு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பொதுதேர்தலுக்குப்பிறகு நடந்த சென்னை-செங்கல்பட்டு ஆசிரியர் தொகுதியில் தேர்தலில் நான் நின்றபோது, ஆசிரியர்களிடமே கூடப் பணம் கொடுத்து ஓட்டு வாங்கியிருக்கிறார்கள். நானே கொடுத்தேன் என்று வேண்டுமானாலும் கருதிக் கொள்ளுங்கள். அந்த இழிவை நானே ஏற்றுக் கொள்கிறேன். அந்த அளவுக்கு ஆசிரியர் நிலைமை பரிதாபமாக வைக்கப்பட்டுள்ளது என்றால், ஜனநாயகம் வாழ்கிறதா இந்த நாட்டில் ? நல்லாட்சி நடைபெறுகிறதா ? ஒரு நண்பர் கூறியதுபோல் முதல் அமைச்சர் காமராசர் அவர்கள் தர்மபுத்திரராக இருக்கலாம். அப்படி இருக்கவேண்டிய காலம் இதுவல்ல, தர்மபுத்திரர் காலம் வேறு. நாம் வாழ்கிற காலம் வேறு. ஜனநாயகத்துக்கு ஏற்ற புத்திரர்கள் தான் இப்பொழுது தேவை. ஜனநாயக உணர்ச்சிக்கு மாறுபட்ட அரசியல் இன்று நடக்கவில்லையா ?

சைக்கிலில் 3 பேர்கள் போனார்கள் என்பதைக் குற்றச்சாட்டாக எடுத்துச் சொன்னார்கள். 3 பேர் போனால் அது **nuisance** குற்றம் போலீசாருக்கு வழக்குப்போட உரிமை இருக்கிறது. இரண்டு பேராக வருகிறவர்களை வளைத்து அடித்து விரட்டும் நிலைமை இல்லையா ? நாட்டில் நடக்கவில்லையா? போலீஸ் இலாகாவுக்குத் தெரியாதா ? இரண்டு சார்பிலிருந்தும் கொடுக்கப்பட்ட வழக்குகள் யாவும் எடுத்துக் கொள்ளப்பட்டு விசாரிக்கப்பட்டனவா? எங்களிடம் குறிப்புகள் கிடையாதா ? சிறு தவறுகள் பல கண்டபோதும் சகிப்புத்தன்மையோடு இவ்வளவு பெரிய பொதுத் தேர்தலில் இவைகள் இருக்கதான் செய்யும் என்று சகித்துக் கொண்டோம். அந்த நிலைத் தேர்தலுக்குப் பின்னாலும்கூட வளரவில்லையா ? திருத்தணிப்பகுதியில் தோற்ற கட்சியைச் சேர்ந்தவர்கள் வெற்றி பெற்றிருக்கிற சுயேச்சை

உறுப்பினரைச் சேர்ந்தவர்களை இன்றைக்கும் தாக்கிக்கொண்டு இருக்கிறார்கள். வீடுகள் சூறையாடப்படுகின்றன. வழக்குகள் இதுவரை ஒரு சார்பாகப் போடப்பட்டுள்ளன. இப்போதுதான் இரண்டு பக்கத்தைச் சேர்ந்தவர்கள் மீதும் போட்டிருக்கிறார்கள். இவைகளை எல்லாம் கவனிக்க வேண்டாமா ? முன்னாள் போலீஸ் அமைச்சராக இருந்தவர்களாவது அதிகப் பொறுமை உள்ளவர்களாகக் கருதப்படும் நிலைமை இருந்தாலும், இன்றையதினம் முதலமைச்சரே போலீஸ் அமைச்சராக இருக்கும்போது, உடனடியாக விசாரிக்க வேண்டாமா ? தருமபுத்திரர் என்று அழைத்ததற்காகவாவது, இதை விசாரித்து இந்தத் தவறுகள் இனியாவது நடக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டாமா ? இவைகள் நடைபெறுகிற நேரத்தில் எதிர் கட்சியினர்மீது குற்றம் சாட்டினால் என்ன பலன் ? நாங்கள் ஆட்சி, அதிகாரம், ஆயுதம் எதுவும் இல்லாதவர்கள் எதிர்ப்பைக் காட்டுவது என்றால், பேசுவதைத்தவிர வேறு எந்தச் செயலிலும் ஈடுபட முடியாது. எதிர்க் கட்சியினர் தவறு செய்தால் ஆட்சியாளர்கள் தாராளமாக வழக்குப் போடலாம், தண்டிக்கலாம். சென்னையில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியை சொல்லுகிறேன். பொதுத் தேர்தல் முடிந்து, வாக்குகள் எண்ணுகிற தினம்—கார்ப்பரேஷன் மைதானத்தில் கூடியிருந்த மக்கள் வாக்கு எண்ணிக்கை அவ்வப்போது அறிவிக்கப்படுமா என்று கேட்டபோது, அறிவிக்க முடியாது என்று போலீஸ் அதிகாரி தெரிவிக்க, அறிவித்தாக வேண்டும் என்று பலரும் கூவியதற்காக அக்கூட்டத்தின்மீது அடித்துத்தாக்கி, லத்தி சார்ஜ் செய்யப்பட்டிருக்கிறது. அதைக் குற்றம் என்றுகூட சொல்ல வில்லை. அவர்கள் கடமையைச் செய்யத் தாராளமாக லத்திசார்ஜ் செய் தார்கள். எங்மீது பட்டாலும் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். ஆட்சியாளர்கள் அப்படிச் செய்ய முடியும் அதை எல்லாம் கண்டிக்க வில்லை. ஆனால், அதே நேரத்தில் தேர்தலின்போது எத்தனையோ தவறுகள் நடைபெற்றிருக்கின்றன. அதை எல்லாம் விசாரிப்பதற்கு நான் கேட்டுக்கொள்வேன். எப்படித் தேர்தலுக்கு முன்னால் தேர்தலில் அமைதி, ஒழுங்கைக்காக்க ஒரு குழு ஏற்படுத்தப்பட்டதோ, அதேபோன்று இப் போதும் செய்யவேண்டும். அதே உறுப்பினர்கள்தான் இருக்கவேண்டும் என்பதல்ல. இப்போது யார் வந்தவர்களாக இருக்கிறார்களோ அவர்களைக் கொண்ட குழு வைத்து நடைபெற்ற தேர்தல்காலத்தில் நடைபெற்ற ஒழுங் கற்ற செயல்களை பற்றி விசாரிக்கத்தான் வேண்டும். அதனால் தேர்தல் முடிவு மாற்றப்படும் என்ற கருத்தில் அல்ல வெற்றிபெற்று பெரும் பான்மையாக வந்திருக்கும் கட்சிமீது பழி தூற்றவேண்டும் என்பதற்கும் அல்ல அதில் என்னென்ன தவறுகள் குற்றங்கள் நடக்க இடம் இருந்ததோ அவைகள் இனிமேலும் நடைபெறாமல் தடுக்கவேண்டும் என்றுதான் இதைக் கூறுகிறேன்.

தேர்தல் நேரத்தில் அளவுக்கு மீறிப் பணம் செலவழித்தார்கள் என்று நான் சொல்லும்போது யாரேனும் வருத்தப்படுகிறவர்கள் இருப்பார்களானால், தலைவர்களுக்கு நினைவூட்டுகிறேன். நண்பர் திரு. சிவானந்தம் அவர்கள் இங்கு பேசுகையில் "பலபேர்கள் ஒரு லட்சம் வரை செலவழித்திருக்கிறார்கள்" என்று தெரிவித்தார். சட்டப் படி 9 ஆயிரம்தான் செலவழிக்கலாம். அப்படியானால் லட்ச ரூபாய் செலவழிக்கும் அளவுக்கு நோட்டுகள் எங்கே கைமாறின என்று அருள் கூர்ந்து எண்ணிப்பார்த்தால் போதுமானது. அப்படிப்பட்ட வசதியைப் பெற்றவர்கள் பணபலம் பெற்றவர்கள். இன்றையதினம் ஜனநாயகத்தை கேலிக் கூத்து ஆக்கிக் கொண்டு இருக்கிறார்கள் என்று வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்த நிலைமையை மாற்றவேண்டுமானால் நான் நிச்சயமாக வேண்டிக் கேட்டுக்கொள்வேன். தேர்தல் முறை யிலேகூட மாற்றம் தேவை. **(Proportional representation)** விகிதாசார பிரதிநிதித்துவம் என்ற முறையை இந்த அரசாங்கம் ஏற்று, மத்திய சர்க்காரை ஏற்றுக் கொள்ளும்படிச் செய்வதற்கு முன் வரவேண்டும். அப்படி இருந்தால் தனிப்பட்டவர் வெற்றி முக்கியம் என்ற நிலை மாறி லட்சக் கணக்கில் பணம் செலவழிப்பதைக் குறைத்துக் கொண்டு பல்வேறு வகையானதேர்தல் பித்தலாட்டத்தைக் கைவிடும் நிலை யும் ஏற்படும். மாறாக அந்த கட்சியைச் சேர்ந்தவர்கள் யாரோவருகி றார்கள். இந்தக்கட்சியைச் சேர்ந்தவர்கள் யாரோவருகிறார்கள். யார் வருகிறார்கள் என்பது முக்கியமல்ல, கொள்கைதான் முக்கியம்

என்ற நிலைமை ஏற்படும். அப்படிப்பட்ட நிலைமை ஏற்படுமானால் இந்த வித தவறான காரியத்தில் அதிகாரத்தில் உள்ளவர்கள் ஈடுபடமாட்டார்கள். அதற்காகவாவது (**Proportional representation**) என்ற முறையை மத்திய அரசாங்கம் ஏற்றுக்கொள்ளும்படி செய்வதற்கு நம் அரசாங்கம் ஆலோசனை சொல்லவேண்டுமென்று வற்புறுத்த விரும்புகிறேன்.

அடுத்து நான் மிகப்பணிவோடு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன், எப்பாடுபட்டாவது விலைவாசி குறைக்கப்பட்டே ஆக வேண்டும். அதைக் குறைப்பதற்கு என்ன வழி? என்ன திட்டம், அதைக் செய்வதற்கு மத்திய சர்க்காரிடந்தான் அதிகாரம் இருக்கிறது என்று சொன்னால், அரிசி விலை ஒன்றையாவது குறைப்பதற்குள்ள பொறுப்பை மாகாண சர்க்கார் எடுத்துக்கொள்ளவேண்டும். நம்முடைய அரசு அடிப்படையான இந்த உணவுப் பிரச்னையில் இன்றியமையாத பொறுப்பை ஏற்றிருக்கிறது. மற்றப் பொருள்கள் விலை எப்படி ஆனாலும்கூட முக்கியமாக அரிசி விலை குறைந்தால் அதையொட்டி பருப்பு விலை குறையும், பருப்பு விலை குறைந்தால் மிளகாய் விலை குறையும். இப்படி அதற்குத் தொடர்புள்ள உணவுப் பண்டங்கள் விலை குறையும். வேண்டுமானால் சோப்பு, சீப்பு, துணி போன்ற பொருள்கள் அதிக விலை விற்கலாம். உவைகளுக்குப்போடப்பட்டிருக்கிற புது வரிகளினால் அவைகள் இன்னும் அதிகமாக விலை ஏறலாம். அரிசி விலை குறைந்தால் பெரும்பாலான ஏழைமக்களுக்கு வசதிஅல்ல வாழ்வாவது அளிக்க முடியும் அதற்கு என்ன செய்யவேண்டும்? விவசாயத்தைப் பொறுத்தமட்டில், விவசாயிகளுக்கு அளிக்கப்படவேண்டிய உரம் போதுமான அளவுக்கு இப்போது அளிக்கப்படவில்லை. குறைந்த விலையில் அவர்களுக்குக் கிடைக்க வில்லை என்பதுடன்கூட, அவர்கள் கள்ள சந்தையில் அதிக விலை கொடுத்து வாங்கவேண்டிய நிலை இன்றும் இருக்கிறது. அந்த நிலையில்தான் ஏழை விவசாயிகள் இருக்கிறார்கள். அதை போல கொழுவாக இருந்தாலும் மண் வெட்டியாக இருந்தாலும், உழவு மாடாக இருந்தாலும், குறைந்த விலையில் கிடைப்பதற்கு வழிவகைகளைக் கண்டாகவேண்டும். விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிற பெரிய பணக்காரர்களைப்பற்றிக் கவலைப்படவேண்டிய அவசியமில்லை. ஏழை மக்களுக்குத்தான் இந்தக் கவலை ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் போதுமான உணவு உற்பத்தி செய்தால்தான், உணவு உற்பத்தி பெருகமுடியும். அதற்கு அனுகூலமாக விலைவாசிகளைக்குறைக்க வேண்டும். குறிப்பாக அரிசி விலையை உடனடியாகக் குறைக்க வழிகாண வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். அதற்கான வழிவகைகளை எண்ணிப்பார்த்து செயல்படுத்தவேண்டும்.

அடுத்தபடியாக, எதற்கெடுத்தாலும் வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது என்று பேசுகிறார்கள் என்று குறைப்பட்டுக்கொண்டார்கள். ஒரு அங்கத்தினர் வடக்கு வாயைப் பிளக்கிறது, தெற்கு நிமிர்ந்து பார்க்கிறது என்று சொன்னார்கள். எதனால் வடக்கு வாயைப் பிளக்கிறது என்று எண்ணினேன். இவ்வளவு பெரிய அளவில் இங்கே திராவிட முன்னேற்றக் கழகம் வளர்ந்து விட்டதே வேகமாக என்று எண்ணிப் பார்த்ததாலோ, அன்றி இவ்வளவு வேகமாக காங்கிரஸ் தேய்கிறதே என்று தெரிந்து கொண்டதனாலோ, ஏற்பட்ட பயத்தினால்தானோ ஐயுறுகிறேன். எதனால் திராவிட முன்னேற்றக் கழகம் இவ்வளவு வேகமாக இங்கே வளருகிறது? வடக்கு வஞ்சிக்கிறது என்று இந்த நாட்டு மக்கள் உணர்ந்த காரணத்தால் தான் மேலும் பக்கத்து மாநிலங்களிலும் வளரத்தொடங்கியுள்ளது.

4–50 p.m. சென்னையை "ஏ" பிரிவு நகராக ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று அனைவரும் எடுத்துச் சொல்லியும், மாகாண சர்க்கார் கேட்டும் ஏன் டெல்லி சர்க்கார் அதை மறுத்தார்கள்? ஏற்கனவே மற்ற நகரங்கள் வளரும் நிலையில் அந்தந்தக் காலங்களிலே "ஏ" பிரிவாக ஏற்பட்டிருக்கும்போது, பம்பாய், கல்கத்தா, டில்லி போன்ற வடநாட்டு நகரங்களை "ஏ" பிரிவாக ஏற்றுக்கொண்டிருக்கும்போது, அவற்றை எந்த இலக்கணத்தை வைத்து எந்த முறையை எந்த நியதியைக் கொண்டு ஏற்றுக் கொண்டார்களோ அதே இலக்கணத்தை நியதியை வைத்து சென்னையை "ஏ" பிரிவாக்க வேண்டுமென்று கேட்டபோது ஏன் அதைச் செய்யவில்லை? சில பெரியவர்கள் தேர்தல் நேரத்தில் பேசும்போது சென்னை நகரில் தேர்தலில் நிற்பார்கள் என்ற காரணத்தால், இந்த நகரம் "ஏ" பிரிவாக ஆக்கப்படுவது உறுதி, அதற்கான

26th April 1962] [Sri K. Anbazhagan]

முயற்சியை நாங்கள் எடுத்துக் கொண்டு விட்டோம் என்றும் மத்திய சர்க்காரை கட்டாயப்படுத்துவோம் என்றும் கூறியவர்கள் தேர்தல் முடிந்த வுடன் அந்தப் பேச்சை மறந்து " ஏ " பிரிவாவது " பி " பிரிவாவது என்று அலட்சிய மனப்பான்மையோடு பேசுகின்ற நிலை இன்றுள்ளது. அதற்கு என்ன பொருள்? தெற்கு வாழுகிறது என்று பொருள்? வடக்கு புறக்கணிக்கிறது என்றுதானே அதைக் கொள்ளவேண்டும். இந்த ஒன்றிலேயே இந்த நிலை இருக்கிறது என்று சொன்னால், சான்று வேறு வேண்டுமா? சென்னை நகரத்தில் இருக்கக்கூடியவர்கள் வஞ்சிக்கப்பட வேண்டியவர்களா? சென்னையில் இருக்கிறவர்கள் புத்திசாலிகள், அவர் களைத் தாராளமாக வஞ்சிக்கலாமென்று வடக்கிலுள்ள டில்லி கருதுகி றதா? சென்னை அரசாங்கம் இதைக் கேட்டுக்கொண்டு ஆமோதிக்கிறதா? அல்லது " ஏ " பிரிவாக ஆக்கிவிட்டால், மத்திய அரசில் ஊழியர்களுக்குத் தருகின்ற ஊதிய உயர்வைத் தரவேண்டி இருக்குமே என்று கவலைப் பட்டு பழைய நிதி அமைச்சர் அவர்கள் அதை விரும்பாதவராக இருந்தாரே அப்படி இருக்கிறதா? அப்போது இந்த நிதி அமைச்சர் அப்படித்தான் நினைத்தார். அது எனக்குத் தெரியும். அதனால்தான் அப்போது " ஏ " பிரிவு நகரமாக்கப்படுவதில் அவருக்கு ஆர்வமில்லை இப்பொழுதுள்ளவர்கள் என்ன செய்யப் போகிறவர்கள் என்று கேட் கிறேன்.

அடுத்து இப்போது மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கு ரூ. 10 டியர்னஸ் அலவன்ஸ் விலைவாசி ஏற்றத்தால் ஏற்படுகிற நெருக் கடியை மாற்றிக்கொள்வதற்காக உயர்த்தப்பட்டிருக்கிறது. அதே நிலை யில் இருக்கும் மாநில அரசின் நிலை என்ன? அடுத்த வீட்டில் இருப் பவருக்கு சுவையான விருந்து கிடைக்கிறது. இந்த வீட்டில் இருக்கிறவர் களுக்கு அந்த வாசனைதான் வருகிறது. தமிழ் நாட்டில் பணியாற்றுகிற ஊழியர்கள் நமக்கும் அந்த உதவி வருமா, பத்து இல்லாவிடில் எட்டாவது கிட்டுமா அல்லது ஒன்றுமே வராதா, அமைச்சர்கள் நம் இடத்தில் இரக்கம் உள்ளவர்கள்தானா? இல்லை என்று கையை விரிப் பதற்குத்தான் எண்ணி இருக்கிறார்களா? என்று கவலைப்பட்டுக் கொண் டிருக்கிறார்கள். கனம் வெங்கட்ராமன் அவர்கள் அகில உலகமும் சுற்றிப் பார்த்தவர்கள் ஆயிற்றே! இந்த நாட்டில் மத்திய சர்க்கார் ஊழியர் களைவிட மாகாண அரசின் ஊழியர்கள் தரம் குறைந்தவர்கள் என்று கருத முடியுமா? எனவே ஒரே தரத்தில் பணியாற்றிக்கொண்டு ஒரே வாழ்க்கை நிலையில் இருக்கும் இரண்டு தரத்தாருக்கும் ஒரேவிதமான ஊதியம் அளிக்கப்பட வேண்டுமென்பது நியாயமாதலின் மாநில அரசின் ஊழியர்களுக்கு கிடைக்க உடனடியாக பஞ்சப்படியை உயர்த்த வழிவகை செய்யவேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன்.

ஆசிரியர்களைப்பற்றி மதிப்பிற்குரிய அங்கத்தினர் பலர் எடுத்து சொன்னார் கள். ஆசிரியர்களுக்கிடையில் எந்தவிதமான ஊதிய பேதமும் இருப்பது நம் நாட்டிற்கு உகந்தது அல்ல என்று சம்பளக் கமிஷன் தெரிவித்திருக் கிறது. இன்றைய தினம் சென்னை நகரில் நிதி உதவி பெறும் பள்ளிக் கூடங்களில் இருப்பவர்களுக்கு வீட்டு வாடகை அலவன்ஸ் (**House rent Allowance**) சென்னை நகரத்திலேயே தரப்படவில்லை. ஒரு வேளை, அன்பழகனுக்கு ஓட்டுப்போட்டவர்களுக்கு வீட்டுவாடகைப்படி ஏன் கொடுக்க வேண்டுமென்ற துர்பாக்கியமான நிலைமை ஏற்பட்டுள்ளதோ என்னவோ தெரியவில்லை. கொடுக்க எண்ணியும் செய்யாமல் விடுவதற்கு அதுவே காரணம் என்றால் நீங்கள் அவர்களுக்கு வீட்டு வாடகை அலவன்ஸ் கொடுக்க ஒப்புக் கொள் வீர்களானால் நான் வேண்டுமானால் உங்கள் விருப்பத்திற்காக ராஜி னாமா செய்துவிடுகிறேன். இந்த விஷயத்தில் ஒரு ஒப்பந்தத்திற்கு வரவும் இசைவேன். ஏனெனில் என்னை எதிர்த்து நின்ற ஒரு வேட்பாளர் சார்பில் ஆசிரியர்களுக்கு ஒரு உறுதி மொழி அளிக்கப்பட்டது. அவருக்கு ஓட்டுப் போட்டால் உடனே ஆசிரியர்களுக்கு வீட்டுவாடகை அலவன்ஸ் அளிக்க அரசாங்கம் முன் வரும், எதிர்க்கட்சிக்காரருக்கு வாக்கு அளித்தால் அரசாங்கம் அதைக் கொடுக்காது என்று சொல்லி இருக்கிறார்கள். கனம் திரு. வெங்கட்ராமன் அவர்களை ஜனநாயகத்தின் பெயரால் கேட் கிறேன். ஜனநாயகத்தின் பெயரால் தலைவர் அவர்கள் மூலமாக அமைச்

சர்களைக் கேட்கிறேன். ஏன் இந்த முறையற்ற செயல் நடக்க வேண்டும் என்று. மேலும் எனக்கு ஓட்டுப் போட்டவர்களைவிட ஓட்டுப்போடாதவர்கள் தான் அதிகமாக இருக்கிறார்கள். அவர்களுக்காகவாவது உதவி செய்யுங்கள் வீட்டு வாடகைப்படி கொடுக்க வழிகாணுங்கள், அதற்குத் தயவு செய்து முன்வாருங்கள் என்று விரும்பி வேண்டிக்கேட்டுக்கொள்கிறேன்.

அண்மையில் ஆந்திராவிலிருந்து சில பகுதிகள் தமிழ் நாட்டுடன் சேர்ந்தன. திருத்தணி முதலிய பகுதிகளும் அதில் சேர்ந்திருக்கின்றன. படாஸ்கர் தந்திருக்கிற ஒரு தீர்ப்பின்படி அங்குள்ள ஆசிரியர்களும் இங்கு மாற்றப்பட்டிருக்கிறார்கள். மாற்றி இரண்டு வருட காலமாகிறது. இன்னும், இந்த மாநிலத்தில் தரப்படுகின்ற ஊதிய விகிதம் அதே தகுதியுள்ள அந்த ஆசிரியர்களுக்குத் தரப்படவில்லை. அந்த மாவட்டக் கலெக்டர் என்ன செய்கிறார் ? கல்வித்துறை அதிகாரிகள் என்ன செய்கிறார்கள் ? வெளியே சுற்றுப் பயணம் நடத்தி நாடெங்கும் பேசுகின்ற வர்கள் யாருக்காகவோ இரண்டாண்டு காலமாக அதிலே தயக்கம் காட்டு கிறார்கள் ? ஒரே தகுதியுள்ளவர்களுக்கு இந்த மாநிலத்தில் பணியாற்று கின்ற அந்த ஆசிரியர்களுக்கு இங்கே கொடுப்பதுபோன்ற சம்பளம்கூட கிடைக்கவில்லை என்று சொன்னால், இந்த அரசாங்கம் திறமையாக நடக் கிறது, அதிகாரிகள் திறமையாக வேலைசெய்கிறார்கள் என்று எப்படிப்பாராட் டிக்கொண்டிருக்கமுடியும் ? எஸ்.எஸ்.எல்.சி. தேர்வு பெற்றவர்களுக்கு ஓராண்டு செகண்டரி முறை பயிற்சி ஆந்திராவில் இருந்தது. அந்தப் பயிற்சி பெற்றவர்களுக்கு ஹையர் கிரேடு **(Higher grade scale of pay)** ஆசிரியர் ஊதியந்தான் இங்கு தரப்படுகிறது. செகண்டரி கிரேடு ஊதியம் தரவில்லை என்று அவர்கள் வருத்தத்துடன் தெரிவிக் கிறார்கள். தரவேண்டியதை அதிகமாகத் தருவதுதான் நீதியாகும். தரவேண்டியதைவிடக் குறைப்பது என்றால் அது எப்படி நியாயமாகும் ? நாஞ்சில் வட்டாரத்தில் மருத்துவமனையில் பணியாற்றுகிற நர்சுகளுக்கு சென்னை மாநிலத்தில் கொடுக்கப்படுகிற படி சம்பளம் கொடுக்கவேண்டு மென்று சில திங்களுக்குமுன் அரசாங்கம் ஒரு உத்திரவு அனுப்பி இருந்தார்கள். இப்போது அந்த ஊதியத்தைக் குறைத்துக் கொடுக்க வேண்டுமென்றும் இதுவரை அதிகமாகப் பெற்ற தொகையைத் திருப்பி பெறவேண்டுமென்றும் ஒரு உத்திரவு போடப்பட்டிருக்கிறது. முன்னர் எப்படி அந்த உத்தரவைப் போட்டார்கள், இப்போது எப்படி அதை மாற்றி கொடுத்ததைத் திருப்பிக் கேட்கிறார்கள் என்பது புரியவில்லை. அது என்ன முறை ? தவறான உத்திரவைப் பிறப்பித்திருந்தால் அது முதல் தவறு. அந்தத் தவறைச் செய்தவர்கள் பின்னர் கொடுத்ததைத் திருப்பிப் பெறுவதில் அக்கறை காட்டுகிறார்கள். அதேபோன்றுதான் மேலும் பலபல விடங்களில் தரப்படவேண்டிய ஊதியத்தைப் பற்றிக் கவலைப் படவில்லை. ஆனால் தந்ததையே திருப்பிக்கேட்கிறார்களே என்று ஆசிரி யர்கள் பல இடங்களில் கண்ணீர் விட்டுக்கொண்டிருக்கிறார்கள். அந்தக் கண்ணீரைத் துடைக்க உடனே அதற்குப் பரிகாரம் தேடியாகவேண்டும். நண்பர் திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இந்தச் சட்டமன்றத்தில் ஆசிரி யர்கள் நிலையைப் பற்றி மிக விளக்கமாகச் சொன்னார்கள். அவற்றை அரசினர் அருள்கூர்ந்து சிந்தித்து ஏற்றுக்கொள்ளவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து நான் குறிப்பிட விரும்புகிறேன். சென்னை நகரத்தில் வட சென்னைப் பகுதியில் போதுமான கல்லூரி இல்லை. பெண்களுக்குக் கல்லூரி தேவை என்பதை ஒரு அங்கத்தினர் எடுத்துச் சொன்னார்கள். அந்த வட்டாரத்தில் குறிப்பாக ஜார்ஜ் டவுன் பகுதியில் இடம் கிடைப்பது கடினம். ஆனால் கல்வி இலாகா தலைவர் அவர்கள் முறைப்படியான இட வசதி இருந்தால்தான் பள்ளிக்கு அனுமதி வழங்க முடியும் என்று கூறு வதாகச் சொல்கிறார்கள். பிள்ளைகள் கெட்டாலும் கெட்டும் எனக்குக் குட்டிச் சுவர்தான் தேவை என்று கல்வி இலாகா கூறுகிறது. இந்தக் கருத்து மாறவேண்டும். அந்தப் பகுதியில் பெண்களுக்கென ஒரு பல தொழில் பயிற்சிக் கல்லூரி, **(Polytechnic)** ஏற்படுத்தவும், பெண் களுக்கு என்று ஒரு கல்லூரி துவக்கவும் அரசாங்கம் முன் வரவேண்டும் அதேபோல் தென் சென்னையில் குழந்தைகளுக்கென ஒரு தனி

26th April 1962] [Sri K. Anbazhagan]

மருத்துவ மனை ஏற்படுத்தவும் முன்வரவேண்டும். கீழ்பாக்கம் வைத்தியக் கல்லூரி, Integrated Medical College—இணைப்பு மருத்துவக் கல்லூரியான பிறகு, அதில் எல்லா வசதியும் செய்ய முயற்சி எடுத்துக் கொள்ளப்படுகிறது என்று, தேர்தலுக்கு முன்னர் தெரிவிக்கப்பட்டது. இப்பொழுது அமைச்சராக வந்துள்ளவர் இட வசதி கிடையாது வேறு நகருக்கு மாற்றவேண்டும் என்று சொல்லுவதாகக் கேள்விப்படுகிறேன். கீழ்பாக்கத்தில் இருக்கிற கல்லூரியை மாற்றி வேறு மாவட்டத்திற்கு கொண்டு சென்றாலும் உள் நாட்டு மருத்துவ ஆராய்ச்சியும் பயிற்சியும் அளிக்கும் சித்த மருத்துவக் கல்லூரியாக நடத்துவதற்கு முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இங்கே பேசிய ஆளும் கட்சியை சேர்ந்த நண்பர் ஒருவர் சென்னை நகராட்சி மன்ற நிர்வாகத்தில் குறைகள் இருப்பதாக ஆத்திரத்தோடு தெரிவித்தார். நான் சொல்லிக்கொள்ளவிரும்புகிறேன். ஆளுங்கட்சியினருக்கு மாநகராட்சி மன்றத்தை திராவிட முன்னேற்றக் கழகம் நடத்துவது மனதிற்குப் பிடிக்காததாக, வெறுப்பு உள்ளதாக, சகிக்க முடியாததாக இருக்குமானால் மாநகராட்சி மன்ற நிர்வாகத்தில் இருக்கிற குறைகளை ஆராய உண்மையாகவே ஒரு குழு ஏற்படுத்த வேண்டும். அதை விட்டு விட்டு உண்மைக்கு மாறாக மாநகராட்சி மன்றத்திற்கு overbridge கட்டுவதற்காகப் பணம் கொடுத்தோம், திருப்பி அனுப்பிவிட்டார்கள் என்று பேசுவது உண்மைக்குப் பொருந்துவது அல்ல என்று தெளிவித்துக்கொள்ள விரும்புகிறேன். திருவொற்றியூர் நெடுஞ்சாலையில் மேம்பாலம் கட்டுவதற் 5.00 p.m.
கான திட்டத்தை 15—8—1960-ல் முதல் முதலில் அரசாங்காம் ஏற்றுக் கொண்டிருக்கிறது. அதற்கான உத்திரவு மாநகராட்சி மன்றத்திற்குக் கிடைத்த பிறகு, வேலையை ஏற்று நடத்துவதற்கான tender கேட்டு 4—9—1961-ம் நாள் குறிப்பிட்டு விளம்பரப்படுத்தப்பட்டுள்ளது. அதை ஏற்றுக்கொண்டு மனுக்கள் வரவில்லை. அதைக் கார்ப்பரேஷன் தனிப் பட்ட முறையில் செய்வதற்கான இயந்திர வசதி இல்லை. இது அமைச்சர்களுக்கே தெரியும். மேலும் இதற்குத் தேவையாகும் நிலத்தை எல்லாம் கலெக்டர் பலரிடமிருந்து கைக்கொண்டு ஆர்ஜிதப்படுத்தி மாநகராட்சியிடம் ஒப்படைக்கவேண்டும். இதுவரையில் முற்றும் ஒப்படைக்கவில்லை. ஆர்ஜிஜிதம் செய்ய வேண்டிய நிலம் இன்னும் இருக்கிறது. இதில் நியாயமான தாமதத்திற்கே கூட பொறுப்பு வேறு எங்கேயோ இருக்கிறது. மாநகராட்சி மன்ற நிர்வாகத்தின் மீது தாக்குகிறார்கள். அதே போல் ஹைகோர்ட்டு over bridge மேம்பாலத்தைப் பொறுத்தவரையில் அரசாங்கம் இதற்குப்பொறுப்பு எடுத்துக்கொள்ளும் என்று இதுப்பற்றிய குழுவில் இருந்த அமைச்சர் சுப்பரமணியம் முதலில் சொல்லிவிட்டார்கள். கடைசியாக இப்பொழுது தான், ஒருமாதகாலத்திற்கு முன்னால், நீங்கள் உங்கள் விருப்பப்படிகட்டுங்கள் என்று மாநகராட்சி மன்றத்துக்கு அறிவித்துள்ளதாக அறிகிறேன். மேலும் ஒரு பெரிய கம்பெனியைச் சேர்ந்த நிபுணரைக் கொண்டு ஆராய்ச்சி நடத்தியதில் அங்கு மேம்பாலம் கட்டுவதாக இருந்தாலும், அந்த இடத்தில் தோண்டினால் நீர் வந்து கசிகிறது என்றும், அந்த இடத்தில் overbridge கட்டுவதைப் பற்றி ஆராய வேண்டும் என்று சொன்ன காரணத்தாலும் தாமதமாக இருக்கிறது. இதைச் செய்வதிலே பெரும பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டியது சென்னை அரசாங்கமே தவிர கார்ப்பரேஷன் அல்ல. அதே போன்று கோடம்பாக்கம் மேம்பாலம கட்டும் பொறுப்பு—சென்னை வீடுகட்டும் ஆலோசனைக்குழு (Housing Board) எற்றுக்கொண்டிருக்கிறது. மாநகராட்சியிடம் அந்த பொறுப்பு ஒப்படைக்கப்படவில்லை. ஆனால் மாநகராட்சி மன்றத்தைப்பற்றிக் கடுமையாகத் தாக்கிப் பேசிவிட்டால்போதும் என்ற எண்ணம் இருக்குமானால், தாக்கட்டும். அதை ஏற்றுக்கொள்ளத்தயாராக இருக்கிறோம்.

அதே போன்று குடிதண்ணீர் திட்டத்தைப் பற்றிக் குறை கூறப் பட்டது. இதைப்பற்றியே சட்டமன்றத்தில் பொறுப்புள்ள அமைச்சர் அவர்கள் காரணங்களைக் கூறி விளக்கினர். வடசென்னைக்குப் போட வேண்டிய குழாய்களை (Conduit pipe) முழுவதும் போட்டப்பட்டு விட் டது. அதற்குத்தேவைப்படும் பம்பு—வெளிநாட்டினின்றும் வரவழைக்கப்

[Sri K. Anbazhagan] [26th April 1962

படவேண்டும். அதற்கு மத்திய சர்க்காரின் அனுமதி கிடைக்க வேண்டும். வெளிநாட்டு செலவாணி குறையால் அந்த அனுமதி கிடைக்கவில்லை. இதற்கு பணம் ஒதுக்க முடியாத நிலையைக காரணம் காட்டிவிட்டனர். அதனால் இந்த நாட்டிலேயே ஒரு கம்பெனியில் தயாரித்துத் தரவேண்டும் என்று கேட்க வேண்டியநிலைமை ஏற்பட்டது. அப்படிப்பட்ட கம்பெனிகள் எதைச் செய்வதாக இருந்தாலும் ஒரு வருஷம், இரண்டுவருஷம் என்று காலம் நீடித்து வரும் காரணத்தால் அந்த பைப்பும் இன்னும் வந்து சேராத நிலையில் வடசென்னை தண்ணீர் திட்டம் நிறைவேற்றப்பட முடியவில்லை. மாநகராட்சி மன்றச்சார்பிலே அரசாங்கத்திற்கு ஏராளமான விண்ணப்பங்கள் செய்யப்பட்டுள்ளன. மாநகராட்சி மன்றம் திராவிட முன்னேற்றக்கழகப் பொறுப்பில் ஏதோ சில ஆண்டுகள் இருந்துவிட்ட காரணத்தால் பழி சுமத்தும் மனப்பான்மையை விட்டு விட்டு, மாநகராட்சி மன்றத்தில் பொறுப்பில் உள்ளவர்கள் யாராக இருந்தாலும், நகர மக்கள் அனைவருக்கும் பொதுவான காரியம் என்ற முறையில் ஆற்ற வேண்டிய கடமையை அரசாங்கம் நிறைவேற்றவேண்டும் என்று தெரிவித்துக்கொண்டு, இந்த அளவுக்கு எனது கருத்தைத் தெரிவிக்க வாய்ப்பு அளித்ததற்கு மகிழ்ச்சி தெரிவித்துக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

Dr. A. LAKSHMANASWAMI MUDALIAR: Mr. Chairman, as one who has had the privilege of participating in the discussions on the Governor's Address from the time this Council was constituted in 1946, I notice that gradually the Address is becoming shorter and shorter and I wish I can say sweeter and sweeter. Perhaps this is due to the fact that the budget is to be presented shortly. The Governor's Address does not, therefore, propose to deal with the many items of expenditure that the Minister in charge of Finance is going to lay bare shortly. Whatever it may be, Sir, the Governor's Address is one of those very useful parliamentary and democratic conventions that have been established in the mother of Parliaments. It gives us an opportunity—I would not say to survey everything from China to Peru but at least—to srvey all the things that are in progress in our own country and more particularly in this State. And for this, we ought to be grateful for the convention that the Governor's Address is to be utilised for purposes of giving expression not only to the various defects in the administration of this State but also to what we consider fortunate or unfortunate tendencies that may be prevalent in the whole of India. May I avail myself of this opportunity to give expression to our feelings of sincere thanks and grateful appreciation for the noble part that the Governor has played in the very difficult circumstances in which he has to function in the present set-up of the Constitution? Having known Mr. Bisnuram Medhi and followed his career during his stay in this State I understand he may possibly be leaving us at the end of the year or early in January next year. I should like to pay my tribute to the manner in which he has conducted himself and the dignity with which he has functioned as the head of our State, although he is deeply conscious of the fact that in the present set-up of the Constitution he has not the power to do anything except to make promises to the people.

May I, Sir, before proceeding further, appeal to you and through you to the Leader of the House on one fact, which I hope will not be repeated again? It is on very few occasions that we

